திருச்சி மாவட்டத்தில் கல்கி — 1

# கல்கி

KALKI
24.5.87
ரூ. 1.50



## அநாதைகளாய்த் தவிக்கும் பத்தாயிரம் மக்கள்!



**"என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித்தர நான் முடிவுசெய்தது ஏனென்றால்."**

அந்த நாட்கள் எனக்கு இன்றும் நினைவிருக்கு. அப்போது எனக்கு என் மகள் வயதிருக்கும். மாதத்தில் அந்த 5 நாட்களை எத்தனை கடினமாக கடந்தேன்... சங்கடம், தொல்லை, சிரமம். அதைவிட மோசம் என்னவென்றால் எங்கள் காலத்தில் வீட்டுத் தயாரிப்புகளையே உபயோகித்தோம். அது தர்மசங்கடமாயிருக்கும். அதைத் துவைத்து காயப் போட்டு போதும் போதும் என்றாகிவிடும். ஆனால், இப்போது காலம் மாறிவிட்டது.

நான் வாழ்ந்த காலம் வேறு. அதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட காலத்தில் வாழ்கிறாள் என் மகள். இக்காலப் பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட மிகத் துடிப்போடு செயல்பட வேண்டியுள்ளது. எங்கள் காலத்தை விட இப்போது, மாறிவரும் உலகிற்கேற்ப பன்மடங்கு சுறுசுறுப்புடன் இயங்க வேண்டியுள்ளது. ஆகவேதான், என் மகளுக்கு நான் கேர்ஃப்ரீ தேர்ந்தெடுத்தேன். காரணம், நான் இளம் பெண்ணாக இருந்தபோது அனுபவப்பட்டதைப் போல், என் மகளும் சிரமப்படக் கூடாதல்லவா.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். நான் அந்தக் காலத்தில் செய்தது போல் என் மகள் துவைத்துக் காயப் போட்டு சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையானபோது ஒவ்வொரு முறையும் புத்தம் புதிய சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம். ஒரு தாயாகிய எனக்கு எது முக்கியம் என்றால், கேர்ஃப்ரீ மிகமிக சுகாதாரமானது என்பதுதான்.

**உலர்வும் சுகமும்**

அது, கனமில்லாமல் மெல்லியதாக அடக்கமாக இருந்தாலும் என் மகளுக்கு தேவையான பாதுகாப்பைத் தருகிறது. மாத விலக்கை நாப்கினுள் விரைவாக உறிஞ்சிக் கொள்ளக்கூடிய அது, நன்கு அதிகம் உறிஞ்சும் அடுக்குகள் கொண்டது. அது எப்போதுமே உலர்வான உணர்வோடும் வசதியாகவும் வைத்துக்கொள்வதாக என் மகளே கூறுகிறாள். அது மட்டுமா, கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜும் (கூடுதலான பெரிய நாப்கின்) உள்ளது.

நீண்ட, அகன்ற, தடிப்பான கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ், அவளுக்கு கூடுதல் பாதுகாப்பையும் பத்திரமான உணர்வையும் அளிக்கிறது— அந்த சங்கடமான நாட்களில் அல்லது அவளுக்கு



அது தேவைப்பட்டபோது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் வெளியில் சென்று சுற்றி வந்தாலும்கூட அவள் பாதுகாப்பாகவும், பத்திரமாகவும் உணர்கிறாள்.

ஆகவேதான், எங்கள் காலத்தில் கிடைக்காத ஒன்றை என் மகளுக்குத் தர முடிவதை எண்ணி பூரிப்படைகிறேன்... அதுதான் கேர்ஃப்ரீ வசதி...கேர்ஃப்ரீ பாதுகாப்பு. மாறிவரும் காலத்தோடு நாமும் மாற வேண்டாமா!

*கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்- இன்றைய மாறிவரும் உலகிற்கேற்ற முழுமையான சுகம், முழுமையான பாதுகாப்பு*




10 உள்ள பேக்கிலும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்கிலும் கிடைக்கிறது

## கேர்ஃப்ரீ. காரணம், காலம் மாறுவதற்கேற்ப அவளும் மாறுகிறாள்.

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்

OBM/9072/TAM

# தமிழக அரசு நிறுவனங்கள்: நஷ்டத்தில் இமாலய சாதனைகள்!

'ஆமை புகுந்த வீடும் அமீனா புகுந்த வீடும் உருப்படாது' என்பார்கள். உண்மையில், அரசாங்கம் புகுந்த இடம்தான் உருப்படாது என்று சொல்ல வேண்டும். இதற்கு நமது தமிழக அரசுத் துறை நிறுவனங்களே சிறந்த உதாரணங்கள். ஆம்; பல நிறுவனங்களில்கோடிக்கணக்கான ரூபாய்கள் நஷ்டம்! இதை நாம் சொல்லவில்லை. கடந்த 85 — 86 நிதியாண்டின் வரவு — செலவுக் கணக்குகளைத் தணிக்கைச் செய்து வெளியிடப்பட்டுள்ள ஆடிட்டர் ஜெனரலின் அறிக்கையே சொல்கிறது.

தமிழகத்தில் மொத்தம் 74 அரசுத் துறை நிறுவனங்கள் உள்ளன. இவற்றில் நமது தமிழக அரசு மொத்தம் 301.45 கோடி ரூபாயை முதலீடு செய்திருக்கிறது. இத்தனை பெரிய முதலீட்டுக்கு ஒரு பைசாக் கூட லாபம் வரவில்லை என்பது எத்தனை பெரிய கொடுமை! ஒரு சில கம்பெனிகளில் வரும் லாபங்கள் இதர பல கம்பெனிகளின் நஷ்டங்களால் அடிபட்டுப்போக அரசுக்கு ஒன்றும் மிஞ்சவில்லை! இதோ ஆடிட்டர் ஜெனரல் தரும் நஷ்டக் கணக்குகளைப் பார்ப்போம்.

* பொங்கல் பாக்கெட்டில் அம்போ ஆனது ஆறு லட்சம்! — நுகர் பொருள் வாணிபக் கழகம்.




பல்லவன் போக்குவரத்துக் கழகத்தில் ஏற்பட்டுள்ள நஷ்டம் 43.01 கோடி ரூபாய். திருவள்ளுவர் போக்குவரத்துக் கழகத்தில் 3.32 கோடி. தமிழ்நாடு மீன்துறை வளர்ச்சிக் கழகத்தில் 4.92 கோடி. தமிழ்நாடு செராமிக்ஸ் லிமிடெட்டில் 4.17 கோடி. இவை எல்லாமும் நஷ்டம்தான்.

இவற்றில்தான் இப்படி என்பதில்லை. கடந்த 74 இல் ஆதி திராவிடர்களுக்கு வீடு கட்டிக் கொடுப்பதற்கென்று ஆதி திராவிடர் நலத்துறை ஆரம்பிக்கப்பட்டது. நோக்கம் நல்ல நோக்கம்தான். ஆனால் சரியாகச் செயல்படுத்தப்பட வேண்டாமா? அதுதான் இல்லை! 79 ஆம் ஆண்டுவரை இந்தத் துறை தாமே வீடுகளைக் கட்டி ஆதிதிராவிடர்களுக்கு இலவசமாகக் கொடுத்து வந்தது. அதன் பிறகு அரசாங்கத்தில் ஏற்பட்ட கொள்கை மாறுதலால் வீடுகளைக் கட்டிக் கொடுக்கும் பணியை நிறுத்திக் கொண்டு வீடுகளைக் கட்டிக் கொள்ள ஆதிதிராவிடர்களுக்கு உதவித் தொகை அளிக்க ஆரம்பித்தது. முதலில் நான்காயிரம் ரூபாயாக இருந்த இந்த மான்யம் பிறகு ஆறாயிரம் ரூபாய் என்று உயர்த்தப்பட்டது. கட்டுமான வேலை குறையும் போது அதற்கேற்ப ஆட்களும் குறைக்கப்பட வேண்டாமா அல்லது அந்த ஆட்களை வேறு பணிகளுக்கு மாற்றியிருக்க வேண்டாமா? செய்யவில்லை. அதனால் ஏகப்பட்ட நஷ்டம்! சரி, இதுதான் போகட்டும், வீடுகளாவது ஒழுங்காகக் கட்டப்பட்டனவா என்றால் அதுவும் இல்லை. திட்ட காலத்துக்குள் இத்தனை வீடுகள் கட்டப்பட வேண்டும் என்று முதலில் இருந்த இலக்கைப் பிற்பாடு குறைத்து நிர்ணயித்தார்கள். அந்தக் குறைக்கப்பட்ட இலக்கைக் கூட எட்ட முடியவில்லை! கணக்கு வழக்குகளாவது ஒழுங்காக இருக்கிறதா என்றால் அதுவும் இல்லை. 81 — 82 ஆம் ஆண்டிலிருந்தே சரியான கணக்குவழக்குகள் இல்லை. இந்நிலையில் சுய தணிக்கையும்




• நிர்வாகச் செலவிலேயே நிதி கரைந்தது! — பிற்படுத்தப்பட்டோர் மேம்பாட்டுக் கழகம்.

---

**(Internal audit)** 84 இல் ரத்து செய்யப்பட்டு விட்டது!

**ஆ**தி திராவிடர் நலத்துறை இப்படி என்றால், பிற்பட்டோர் நலத்துறை மட்டும் எப்படி ஒழுங்காக இருந்துவிட முடியும்? முப்பது லட்சம் மூலதனத்துடன் ஆரம்பிக்கப் பட்ட இது, நிர்வாகச் செலவு, ஆபீஸுக்குத் தேவையான பொருள்கள் வாங்குவது போன்றவற்றிலேயே பெரும் பகுதிப் பணத்தைச் செலவழித்துவிட்டு, வளர்ச்சிப் பணிக்கென்று வெறும் 6.88 லட்சத்தை மட்டும் தான் மிச்சம் வைத்திருந்தது. இதனை நிறுவிய போது நான்காண்டுகளில் 15000 பேர் பயனடைவார்கள் என்று அரசு திட்டமிட்டது. ஆனால் உண்மையில் பயன் பெற்றவர்கள் 1311 பேர்களே!

அடுத்து, தமிழக அரசின் குழாய்க் கிணறு வாரியம். ஆதிதிராவிடர் விவசாய வசதிக்காகப் பத்து கோடி ரூபாய் செலவில் 1187 குழாய்க் கிணறுகள் தோண்டுவது இதன் குறியீடு. இதனால் 10,000 குடும்பங்கள் பயனடையும் என்பது லட்சியம். ஆனால் கடந்த 82 லிருந்து 86 ஆம் ஆண்டு வரை ஐந்தாண்டுகளில் வெறும் 63 குழாய்க் கிணறுகளைத்தான் தோண்டியிருக்கிறது. ஒவ்வொரு குழாய்க் கிணறுக்கும் இது காட்டும் செலவு 1.2 லட்சம். ஆனால் இதே அளவான குழாய்க் கிணறு தோண்ட விவசாயப் பொறியியல் துறைக்கு ஆகும் செலவு வெறும் ஐம்பத்தெட்டாயிரம் தான். அப்படியானால் மீதிப் பணம்? எங்கே போனதோ. மொத்தம் இந்த வாரியத்தில் ஏற்பட்டுள்ள நஷ்டம் 64.57 லட்சம்! சரி, அடுத்ததற்குப் போவோம்.

**பொ**துப் பணித்துறையினர் வீடு கட்டிக் கொடுப்பதில் தாமதமிருப்பதால், சமுதாயத்தில் முக்கியப் பங்கு வகிக்கும் போலீஸாருக்கு அடிப்படைத் தேவையான வீட்டு வசதியை உடனடியாகச் செய்து கொடுக்க ஏற்பட்டதுதான் போலீஸ் வீட்டு வசதி வாரியம். இது கடந்த 81 இல் ஆரம்பிக்கப்பட்டு, மொத்தம் 6,700 வீடுகள் கட்டக் குறியீடும் நிர்ணயிக்கப்பட்டது. இருந்தும் கடைசியில் கட்டி முடிக்கப்பட்டதென்னவோ 670 வீடுகள்தான். அவற்றிலும் 317 வீடுகளைப் போலீஸ் அல்லாத மற்றவர்களுக்குத் தான் கொடுத்துள்ளது! காரணம், போலீஸ் துறையில் இந்த வீடுகளைச் சிந்துவாரில்லை! அநாவசியமான காலதாமதங்களாலும், தவறான நிர்வாக முறைகளாலும் இந்த வாரியம் அடைந்துள்ள நஷ்டம் 47.68 லட்சம்!

**இ**வையும் போகட்டும்! தமிழ்நாடு அரசின் மாமிச நிறுவனம் எந்த நிலையில் இருக்கிறது? மக்களுக்குச் சுகாதாரமான, நவீனமான முறையில் மாமிசத்தை விற்பது தான் இதன் நோக்கம். இது 78 இல் கொடுவளி என்ற இடத்தில் ஆரம்பிக்கப்பட்டது. அங்கு அது செயல்படுவதற்குப் பொது மக்கள் எதிர்ப்புத் தெரிவிக்கவே, மாதவரத்திற்குக் கொண்டு செல்லப்பட்டது. மறுபடியும் ஏனோ கொடுவளிக்கே மாற்றினார்கள். இந்த இடமாற்றங்களின் விளைவான கால தாமதத்தால் ஏற்பட்ட திட்ட மதிப்பீடு உயர்வு ஒரு பக்கம் நஷ்டமென்றால், மறுபுறம் சம்பளம், மற்றும் கட்டடச் செலவுகள் போன்றவற்றில் 81.41 லட்சத்தைச் செலவழித்து விட்டுக் கடைசியில் திட்டத்தைச் செயல்படுத்தாமலேயே போட்டிருக்கிறது. ஆக 81.41 லட்சம் அம்போ!

அட, இத்தனை ஏன்? நமது தமிழக அரசின் நுகர்பொருள் வாணிபக் கழகம் பொங்கல் பாக்கெட்டுகளை விற்பனை செய்ததல்லவா! அதில் கூட கடந்த 85 ஆம் ஆண்டில் 6.27 லட்ச ரூபாய் நஷ்டம் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! மூன்று லட்சம் பாக்கெட்டுகளை விற்றுவிட முடியும் என்று தவறாக மதிப்பீடு செய்து கடைசியில் 45,146 பாக்கெட்டுகளைத்தான் விற்பனை செய்தனர். நஷ்டம் வராமல் என்ன செய்யும்?

நாம் உழைத்துக் கொடுக்கும் வரிப்பணத்தை இப்படியெல்லாம் வீணடிக்க இந்த அரசுக்கு என்ன உரிமை இருக்கிறது? இந்த நஷ்டங்களை ஈடுகட்ட நம் மீது மேன்மேலும் புதிய வரிகளைச் சுமத்தத்தான் இவர்களுக்கு ஏது உரிமை? அமைச்சர்கள், எம்.எல்.ஏக்கள், சபாநாயகர் ஆகியோரின் உரிமைகளைப் பற்றி அட்டகாசமாகப் பேசுபவர்கள் இப்படி அட்டூழியம் செய்யும் உரிமை தங்களுக்கு இருக்கிறதா என்பது பற்றிச் சிறிதேனும் சிந்திப்பார்களா?

— **கௌசல்யா**

படங்கள்: **கே. வி. ஆனந்த்**



# சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி-ஃபாரெக்ஸ்®

| குழந்தையின் உயரம் மறறும்* எடையை சோதித்திடுங்கள் | ஆண் குழந்தை | | பெண் குழந்தை | |
|---|---|---|---|---|
| | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) |
| **3** மாதம் | 5.2 | 59.1 | 4.9 | 58.4 |
| **6** மாதம் | 6.7 | 64.7 | 6.1 | 63.7 |
| **9** மாதம் | 7.3 | 68.2 | 6.9 | 67.0 |
| **12** மாதம் | 8.4 | 73.9 | 7.8 | 72.5 |

* இது இந்தியக் குழந்தை மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தால் வழங்கப்பட்டது. இது இந்தியக் குழந்தைகளுக்கு மட்டுமே சராசரியாகும். குழந்தையின் வளர்ச்சி உங்கள் டாக்டரின் திருப்திக்கேற்ற வகையில் இருந்தால் போதும்.

வண்ணமய பாப்பா— பராமரிப்பு வழிகாட்டி இலவசமாய் பெற்றிட இதை அனுப்புங்கள் இங்கே: க்ளிண்டியா லிமிடெட் (FPD/51), டாக்டர் அன்னி பெஸண்ட் ரோட், ஓர்லி, பம்பாய்-400 025.




உங்கள் குழந்தை பரிபூரண அபிவிருத்தியும் வளர்ச்சியும் அடைந்திட போஷாக்கு நிறைந்த ஃபாரெக்ஸ் அளியுங்கள்.

**ஃபாரெக்ஸ்®**

சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி

26/203

# பளிச்சிடும் தொழில்; ஒளி மங்கிய வாழ்க்கை!



செயற்கை வைரத்தைப் பட்டை தீட்டி, பாலிஷ் செய்யும் பட்டறை.

"அட! மோதிரத்தில் கல் பளிச்சினு இருக்கே! வைரமா, சார்?"

"செயற்கை வைரம்தான். ஒரிஜினல் வைரம் வாங்க நமக்கு முடியுமா?"

"வைர மூக்குத்தி எப்ப வாங்கினே?"

"வைரமில்லே; வெறும் கல்தான்!"

— இப்படி மோதிரம் மூக்குத்தியிலிருந்து நெக்லஸ், வளையல் வரை எல்லாவற்றிலும் உட்கார்ந்து கொண்டு, கண் சிமிட்டி டால டித்துக்கொண்டிருப்பவை செயற்கை வைரங் கள்.

வட இந்தியாவிலுள்ள பணக்காரர்களி டம் இன்றைக்கும் இது ஸ்டேட்டஸ் சிம்பல். ஆமாம், அங்கே கால் செருப்பிலிருந்து கைத் தடி வரை அனைத்திலும் இந்தப் பளபளக் கற்களைப் பதித்துக் கொள்வார்கள். அதுவும் குஜராத், ராஜஸ்தான், காஷ்மீர், உத்திரப் பிரதேச மாநிலங்களில் இக்கற்களுக்கு ஏக டிமாண்ட். தவிர, அரபுநாடுகளுக்கும், பாகிஸ் தான், ஆப்கானிஸ்தான் பகுதிகளுக்கும் அர சுக்குத் தெரிந்தும் தெரியாமலும் இந்தச் செயற்கை வைரக் கற்கள் ஏராளமான அள வுக்குப் போகின்றன.

இந்தச் செயற்கை வைரத் தொழில் என்பது அகில உலக அளவில் எடுத்துக் கொண்டால், நெதர்லாந்தில் மட்டும்தான் நடக்கிறது. அதற்கு அடுத்தபடி, திருச்சியில் தான் என்பது ஆச்சரியமான விஷயம்! திருச் சூரில் பெருக்கு நடந்தாலும், திருச்சியில் தான் சுமார் ஒரு லட்சம் தொழிலாளர்கள் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளார்கள். இப் படிப்பட்டதோர் அபூர்வமான தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள், நிச்சயம் நல்ல வருமானத்தோடுதான் வாழ்வார்கள் என்றுதானே எண்ணத் தோன்றுகிறது. அது தான் இல்லை. பலர் இத்தொழிலை விட்டே ஓடுமளவுக்கு இந்தத் தொழில் நசிந்து போய் விட்டது என்பதுதான் நிதர்சனம். சம்பந்தப் பட்ட தொழிலாளர்களைச் சந்தித்தபோது, அவர்கள் அழாதகுறைதான்!

முதலில், இந்தத் தொழிலைப் பற்றிக் கொஞ்சம் தெரிந்து கொள்வோம். செயற்கை வைரம் என்பது, ஒருவித ரசாயனப் பொருள் தான். இதை 'சிந்தட்டிக் ஜெம்' என்று சொல் கிறார்கள். இவை பல்வேறு வண்ணங்களி லும் தயாரிக்கப்படுகின்றன. எனினும் நீல நிறத்துக்குத்தான் விலை அதிகம். வெள்ளை தான் எல்லா நிறங்களை விடவும் குறைவான விலை!

'சிந்தட்டிக் ஜெம்' என்பவை உருளை வடி வத்தில் நீள நீளமாகத்தான் தயார் செய் வார்கள். அதைக் கொண்டு வந்து மூன்று நிலைகளில் வேலை செய்யும்போதுதான், நகை களில் பளிச்சிடும் அவை அசல் வைரங்கள் போலாகின்றன. முதல்நிலை 'ஷேப்பிங்' செய் வது. அதாவது நீள நீள உருளைகளைச் சிறுசிறு துண்டுகளாக வெட்டுவது. அடுத்தது பட்டை தீட்டுவது. இது இரண்டாவது நிலை. இதற் குக் கலை நுணுக்கத்தோடு கூடிய அறிவு வேண்டும். இல்லையெனில் அத்தனை சின்னக்

கற்களில் பல்வேறு பட்டைகளைத் தீட்ட முடியாது. இப்படிப் பட்டை தீட்டப்பட்டவற்றைப் பளபளவென்று ஜொலிக்கச் செய்யும்மூன்றாவதுநிலைதான் 'பாலீஷ்' செய்வது.

'ஷேப்பிங்' செய்யும் தொழிலில் ஈடுபட்டிருக்கும் ராஜு என்பவரைச் சந்தித்தபோது, "சார், இந்தச் செயற்கை வைரக் கற்களை உருவாக்கும்கம்பெனி மேட்டுப்பாளையத்தில் இருக்கிறது. அதற்கு 'இன்டோ—ஸ்விஸ் சிந்தட்டிக் ஜெம் மானுஃபாக்சரிங் கம்பெனி' என்று பெயர். அதிலிருந்து உற்பத்தியாகி வரும் செயற்கை வைரங்களைத்தான் நாங்கள் வாங்கி வந்து சிறுசிறு துண்டுகளாக அறுத்துக் கொடுக்கிறோம். அறுக்கும்போது சேதாரம் ஏற்படாமல் இருக்குமா? நிறையச்



* ராஜு



* அக்பர் ஹுசேன்

சேதாரமாகும். ஆனால், பட்டை தீட்டிப் பாலீஷ் செய்யப்பட்ட கற்களுக்கான விலை என்பது எப்போதுமே ஸ்டாண்டர்ட் ஆக இருப்பதில்லை. அதனால் பல சமயங்களில் எங்களுக்கு லாபமே கிடைப்பதில்லை. இதில் யாரும் ஒரு முதலாளி போல் இருந்து கொண்டு கூலியாட்களை வைத்துக் கொண்டு இந்ததொழிலைச் செய்யவில்லை. அவரவரும் சுயமாகச் செய்வதால் எங்களுக்கேற்படும் உழைப்பு நஷ்டம் அத்தனை அதிகமாகத் தெரிவதில்லை. ஏதோ நாளுக்கு ஐந்தோ பத்தோ கிடைத்தாலே போதும் என்ற நிலையில்தான் இருக்கிறோம்...." என்றார் அவர்.

**அ**டுத்து, பட்டை தீட்டிப் பாலீஷ் போடும் தொழிலில் ஈடுபட்டுள்ள அக்பர் ஹுஸேனைச் சந்தித்தபோது, "ஒரு தொழிலாளி ஒரு நாளைக்குக் கிட்டத்தட்ட பன்னிரண்டு மணி நேரம் உழைத்தால்தான், சுமார் இருபது கற்கள் வரை பட்டை தீட்டிப் பாலீஷ் செய்ய முடியும். பெரும்பாலான தொழிலாளர்களுக்குப் பட்டை தீட்டும் மெஷின் சொந்தமாக இருக்காது. வாடகைக்குத்தான் பிடிப்பார்கள். அதற்கு நாளொன்றுக்கு மூன்றுரூபாயாவதுவாடகைகொடுக்கவேண்டும். அதோடு செயற்கை வைரத்தைப் பட்டை தீட்டுவதற்கு நிஜமான வைரக் கடைகளில் விணாகி — உதிரியாகும் வைரத் தூள்

* மதார் சிங்



கள் வேண்டும். அதைக் கொண்டுதான் பட்டை தீட்ட முடியும். அதற்குச் சராசரியாக ஒருநாளுக்கு ஐந்து ரூபாய் அளவுக்குச் செலவு செய்ய வேண்டும். இதோடு சேதாரம் வேறு நிறைய ஆகும். ஆக, இருபது கற்களைத் தீட்டி பாலீஷ் செய்தால் கிடைக்கும் இருபது ரூபாயில் இப்படிப்பட்ட செலவுகள் போக நாளொன்றுக்குச் சராசரியாகப் பத்து ரூபாய்க்குள்தான் கிடைக்கும்...

"பட்டை தீட்டுவது சாதாரண விஷயமல்ல. அத்தனை சிறிய கற்களுக்குப் பட்டை தீட்டக் கண் பார்வை கூர்மையானதாக இருக்க வேண்டும். மேலும் தொடர்ந்து இந்த வேலையைச் செய்து கொண்டிருந்தால், கண் பார்வையின் சக்தி குறைந்து கொண்டே வரும் வாய்ப்பும் உண்டு. அதற்கு யார் நஷ்ட ஈடு தருவார்கள்? எங்கள் கஷ்டங்களுக்குக் காரணமே, மெருகேற்றப்பட்ட கற்களின் விலையை யாரோ ஒரு சில சேட்டுகள் நிர்ணயிப்பதுதான். அதை மாற்றி நமது அரசாங்கமே ஏதாவது கூட்டுறவுச் சங்கம் ஆரம்பித்து எங்களுக்குத் தேவையான மூலப் பொருள்களைக் கொடுத்துக் கடைசியில் விற்பனை செய்யும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டால்தான் எங்களுக்கெல்லாம் ஒரு விடிவு காலம் பிறக்கும்!" என்றார்.

**பா**லீஷ் வேலையெல்லாம் முடிந்து விற்பனைக்குத் தயார் நிலையிலான செயற்கை வைரக் கற்களை வாங்கி விற்கும் வியாபாரியான மதார்சிங்கைச் சந்தித்தோம். அவர், "சார், இந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களுக்குச் சரியானபடி ஊதியம் கிடைப்பதில்லை என்பது உண்மைதான். அதற்கு அவர்கள் என்னைப் போன்ற வியாபாரிகள்தான் காரணம் என்று கருதுகிறார்கள். உண்மை அதுவல்ல. நானும் என்னைப் போன்றவர்களும் அவர்களைப் போல் பாதிக்கப்படுபவர்கள்தான் என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும்.

"எப்படி என்றால், என்னைப் போன்றவர்களும் இதன் விலையை நிர்ணயிப்பதில்லை. நாங்களும் இன்னொரு வியாபாரிக்குத்தான்



**கத்திக் குத்துக்குக் கலங்காதவர்; கருத்தற்ற பேச்சை விரும்பாதவர்!**

"**வி**. பி. சிந்தன் மிக எளிமையானவர். எங்கு சென்றாலும் பஸ்ஸில்தான் சென்று கொண்டிருந்தார். 73 ஆம் ஆண்டு, பஸ்ஸில் சென்று கொண்டிருந்த போது, குண்டர்களால் தாக்கப்பட்டு, மொத்தம் பதினெட்டு இடங்களில் கத்திக் குத்துக்கு ஆளானார். அதன்பின், பல்வேறு தொழிற்சங்கத் தொழிலாளிகளும் சேர்ந்து நிதி திரட்டி, அவரது பாதுகாப்புக் கருதி ஒரு கார் வாங்கிக் கொடுத்தனர். முதலில் மறுத்தாலும், மற்றவர்களின் வற்புறுத்தலுக்காகக் கடைசியில் காரை ஏற்றுக் கொண்டார்.

"இத்தனை காலம் தொழிற்சங்கத் தலைவராய் இருந்தாலும், சென்ற முறைதான் முதல் தடவையாக அவர் தேர்தலில் நின்று வெற்றி பெற்றார். முதலில் அவர் தேர்தலில் போட்டியிட ஒப்புக்கொள்ளவில்லை. தேர்தல் கூட்டணியில் தொகுதிப் பங்கீடு செய்து கொள்ளப்பட்ட போது, எங்கள் கட்சிக்கு ஒதுக்கப்பட்ட வில்லிவாக்கம் தொகுதி, தொழிலாளர்கள் நிறைந்த தொகுதி. அதில் போட்டியிடச் சரியான வேட்பாளர் வி. பி. சிந்தன்தான் என்று கட்சி கருதியதால், அவரும் ஒப்புக் கொண்டார். சட்டமன்ற உறுப்பினர் என்கிற முறையில் அவர் எந்த ஒரு விஷயம் பற்றிப் பேசினாலும், மிகவும் தெளிவாக, அழுத்தம் திருத்தமாகப் பேசுவார். அ. தி. மு. க., தி. மு. க. இரண்டு கட்சிகளும், மக்களின் பிரச்னைகளை விட்டு விட்டு, வீணான, அர்த்தமற்ற சர்ச்சைகளில் ஈடுபடும் போதெல்லாம், சலிப்புடன் வருத்தப்படுவார்.

"மிகவும் சுறுசுறுப்பானவர். காலை ஏழு மணிக்கு வீட்டை விட்டுப் புறப்பட்டால், இரவு வீடு திரும்ப எத்தனை மணியாகும் என்றே தெரியாது. எத்தனை நேரமானாலும் இரவில் படுக்கப் போகுமுன் கொஞ்ச நேரமாவது சமஸ்கிருத இலக்கியங்களைப் படித்து விட்டுத்தான் படுப்பார்.

"ஒன்றரை ஆண்டுகளுக்கு முன்னால்தான் அவர் முதல் தடவையாய் ஹார்ட் அட்டாக்கிற்கு ஆளானார். உடனே ஆஸ்பத்திரியில் சேர்த்து, இன்டென்ஸிவ் கேர் யூனிட்டில் சிகிச்சையளிக்கப்பட்டது. டாக்டர் இரண்டு மாதம் முழுமையான ரெஸ்ட் எடுக்க வேண்டும் என்று சொன்னார். ஆனால் சிந்தன் கேட்கவில்லை. நாங்கள் அவரை மெடிக்கல் டிரீட்மெண்டுக்காக ரஷ்யா அனுப்ப விரும்பினோம். ஆனால் அவரோ இங்கே தமக்குள்ள வேலைகளை விட்டுவிட்டு, அயல்நாடு போவதை விரும்பவில்லை.

"இந்த ஆண்டு மார்க்சிஸ்ட் கட்சியின் மத்தியக் குழு, வி. பி. சிந்தனை மேதினப் பேரணியினைப் பார்வையிட இந்தியப் பிரதிநிதியாக மாஸ்கோ அனுப்ப முடிவெடுத்தது. சிந்தனும் போக ஒப்புக் கொண்டார். மாஸ்கோ போவதால் அப்படியே ஹார்ட் டிரீட்மெண்ட்டையும் முடித்துக் கொண்டு வந்து விடுமாறு அவரைக் கேட்டுக் கொண்ட போது சம்மதித்தார். நாங்கள் அவரது மருத்துவ அறிக்கைகளை அனுப்பிச் சிகிச்சைக்கும் ஏற்பாடு செய்தோம். எல்லாமே பயனில்லாமல் போய்விட்டது. அவர் மரணம் எங்களுக்கெல்லாம் ஒரு பெரிய இழப்புத்தான்!"

சி. பி. ஐ. (எம்) எம். எல். ஏ. **ஆர். உமாநாத்**
கூறக்கேட்டு எழுதியவர்: **மௌஷ்மி.**

---

விற்க வேண்டியிருக்கிறது. அவர் இதை வாங்கிக் கொண்டு போய் எங்கு விற்கிறார், யாருக்கு விற்கிறார் என்பதெல்லாம் எங்களுக்கும் தெரியாத மர்மமாகத்தான் இருக்கிறது. அதேபோல் மேட்டுப்பாளையத்திலுள்ள சிந்தெட்டிக் தொழிற்சாலையில் உற்பத்தி செய்து தரப்படும் செயற்கை வைரத்துக்கான மூலப் பொருள்களை விட, வெளிநாடுகளிலிருந்து வரும் மூலப்பொருள்களின் விலை குறைவாக இருப்பதற்கு என்ன காரணம்? கடத்திக் கொண்டு வரப்படுவதாலா? இங்கே தயாராகும் மூலப் பொருளுக்கு வரி அதிகமாக இருப்பதாலா? புரியவில்லை.

"இவற்றோடு, ஏராளமாகப் பட்டை தீட்டி, பாலிஷ் செய்து அனுப்பப்படும் கற்களில் வெறும் இருபத்தைந்து சதவிகிதம் கூட நமது நாட்டில் பயன்படுத்தப்படுமா என்பது சந்தேகமே! மீதி எங்கே போகின்றன என்பதும் எங்களுக்குத் தெரியாது. இந்தப் புதிர்களெல்லாம் விடுவிக்கப்பட்டு, அரசே ஒரு கூட்டுறவுச் சங்கத்தை ஆரம்பித்து, இது மாதிரியான செயற்கை வைரங்களை கொள்முதல் செய்து, மற்றவர்களுக்கு விற்றால்தான், இத்தொழிலை நம்பியுள்ள சுமார் ஒரு லட்சம் தொழிலாளர்களும் பயன் பெற முடியும்!" என்றார்.

ஆனால் இத்தொழிலை நம்பியுள்ளவர்களின் வாழ்க்கையை முன்னேற்றுவதற்கான கூட்டுறவுச் சங்கம் அமைப்பதை விட்டு விட்டு, நமது அரசோ இரண்டு செயற்கை வைரப் பட்டறைகளை ஆரம்பித்துச் சில தொழிலாளர்களுக்கு வேலை கொடுத்துப் பார்த்து அவையும் நஷ்டம் என்று மூடிவிட்டுப் புலம்பிக் கொண்டிருக்கிறது.

**— எஸ். சந்திரமௌலி**

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




23

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

| | |
|---|---|
| புரதம் | [illegible] |
| கொழுப்பு | [illegible] |
| கார்போ | [illegible] |
| ஹைட்ரேட் | [illegible] |
| கால்சியம் | [illegible] |
| பாஸ்பரஸ் | பென்டோதெனேட் |
| சோடியம் | கோலின் |
| குளோரைடு | [illegible] (பி) |
| (வீ வடிவில்) | வைட்டமின் (பி) |
| பொட்டாஷியம் | ஃபாலிக் அமிலம் |
| இரும்புசத்து | வைட்டமின் சி |
| அயோடின் | வைட்டமின் டி |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் ஈ |
| வைட்டமின் 'பி' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



## காம்ப்ளான்® – திட்டமிட்ட பரிபூரண உணவு

GX/20/203 TML

# அநாதைகளாய்த் தவிக்கும் பத்தாயிரம் மக்கள்



* வங்காரம்: படிக்கத் தவிக்கும் சிறுவர்கள்.

''ஏங்க, வங்காரத்துக்கு எப்படீங்க போறது?''

''எங்கேர்ந்து வர்றீங்க?''

''மெட்ராஸ்லேர்ந்து.''

''கல்கியா?''

''ஆமாங்க!''

''நாராயணசாமி சொன்னாருங்க. வாங்க, சர்பத் சாப்ட்டுட்டுப் போலாம்.''

''பரவாயில்லீங்க... இப்பத்தான் நாங்க....''

''சாப்ட்டா என்னங்க? இந்தப் பொளக்கற வெயிலுக்கு எத்தனை சாப்பிட்டாலும் பரவாயில்லீங்க. இந்தாங்க... ஒடம்பெல்லாம் வேர்த்திருக்கு. இப்படி நெழலுக்கு வாங்க.... இதே பாதைல கொஞ்ச தூரம் போயி லெப்ட்ல திரும்புங்க. ஒரு ரயில்வே கேட் வரும். அதைத் தாண்டிப் போனீங்கன்னா ஓர் ஓடை வரும். ஆனை வாரி ஓடைன்னு பேரு. அதைத் தாண்டினதும் அயன்தத்தனூர். அப்புறம் வங்காரம்தான். வழில யாரையும் நீங்க கேட்க வேண்டியதே இல்லே. ஆனா உங்க பிளஷர்தான் ஓடைக்குள்ள போகுமான்னு தெரியலே. எதுக்கும் போய்ப் பாருங்க....''

''ரொம்ப நன்றிங்க. நாங்க வர்றோம்.''

''இருங்க அவசரப்படாதீங்க. ரயில்வே கேட் பூட்டியிருக்குமில்லே. ஸ்டேஷன் மாஸ்டர்கிட்டே போய்க் கேளுங்க. ஆளை அனுப்பித் திறக்கச் சொல்லுவார்.''

''கேட்டுலேயே ஆளுங்க இருக்க மாட்டாங்களா?''

''இங்க அப்படி இல்லீங்க..ஏன்னா அது பஸ் ரூட் இல்ல பாருங்க. பஸ்ஸெல்லாம், இங்க — அதான் மாத்தூர்வரைக்கும்தான். அப்புறம் பேசப்படாது. வங்காரம் வரைக்கும் அஞ்சு கிலோ மீட்டர் நடந்துதான் போவணும். அதுதான் நீங்களே பார்க்கப் போறீங்களே, எழுதுங்க.... அப்பவாச்சும் விடியுதான்னு பார்ப்போம்.''

—அவர் சொன்ன மாதிரியே ஸ்டேஷன் மாஸ்டரிடம் போய்ச் சொல்லிவிட்டு வந்து, லெப்டில் திரும்பி, அந்த ரயில்வே ஊழியர் ஸ்டேஷனிலிருந்து சுமார் அரை கி.மீ. தூரம் நடந்து வந்து கேட் திறக்கும் வரை காத்திருந்து போனோம்.

மணலாய்ப் புதையும் மண் பாதை. சுற்றிலும் அனல் காற்று வீசும் வறண்ட பூமி. சுமார் மூன்று கி.மீ. தூரம் போனதும் ஆனைவாரி ஓடை வந்தது. பெரிய ஓடை. அத்தனையும் மணல்.



* ஆனைவாரி ஓடை



* புளி இடிக்கும் பெண்கள்.



* கோடிப் பிள்ளை

நமது டூரிஸ்ட் கார் டிரைவர் ஸ்கையை விரித்து விட்டார். வேறு வழியில்லை. இனி நடை தான். இறங்கினோம்.

அந்த நேரம் பார்த்து ஒருவர் சைக்கிளில் வந்து சேர்ந்தார்.

''வங்காரத்துக்கு இன்னும் எவ்வளவு தூரம் போவணுமுங்க?''

''இன்னும் ரெண்டு கி.மீ. இருக்குங்க. நீங்கள்லாம் அங்க போவணுமா? அப்ப இருங்க. பின்னால இன்னும் ரெண்டு பேர் சைக்கிள்ல வர்றாங்க. உங்க மூணு பேரையும் கூட்டிக்கிட்டுப் போயிடறோம்...''

''ரொம்ப நன்றிங்க.''

''மனுஷங்களுக்குள்ளே இது கூட இல்லின்னா எப்படீங்க? இதோ வந்திட்டாங்க... வாங்க....''

ஓடையைத் தாண்டியதும், அவர்கள் சைக்



* கிராமத்து வீட்டின் மண்வாசனையான தோற்றம்.

கிள்களை ஓட்ட நாங்கள் பின்னால் உட்கார்ந்து கொண்டோம். சுமார் நூறடி தூரம் தான் போயிருப்போம். அதற்குள் சைக்கிள்கள் மண்ணுக்குள் புதைந்து நகர மறுக்கவே அனைவரும் விழுந்தோம்.

''என்னங்க இது? பாதை முழுக்க இப்படித்தான் இருக்குங்களா?''

''இன்னிக்குப் பரவாயில்லீங்க. நேத்து ராத்திரி லேசாத் தூறல் போட்டுச்சு. அதனாலதான் இந்த அளவுக்காவது பாதை கெட்டியா இருக்கு. இல்லின்னா இவ்வளவு தூரங்கூட வந்திருக்க முடியாதுங்க... ம்... இப்ப ஏறிக்குங்க.... போவலாம்!''

மறுபடியும் ஏறினோம்; விழுந்தோம்; ஏறினோம்; விழுந்தோம்.... அப்பாடா! ஒரு வழியாகப் போய்ச் சேர்ந்தேவிட்டோம்!

'**வா**ங்க.... நான்தான் நாராயணசாமி. இந்நேரம் வரைக்கும் உங்களை எதிர்பார்த்து மாத்தூர்லதான் காத்துக்கிட்டிருந்தேன். இப்பத்தான் வந்தேன். ரொம்பவும் சிரமப்பட்டிருப்பீங்களே.... முதல்ல, தாகத்துக்குத் தண்ணி குடிங்க. அப்புறம் கிராமத்தைச் சுத்திப் பார்க்கலாம். இந்தாங்க....'

''இங்க குடிதண்ணிப் பிரச்னையெல்லாம் எப்படீங்க?''

''கடவுள் புண்ணியத்துல குடிதண்ணிக் கொண்ணும் கொறவே இல்லீங்க. பாதை வசதிதாங்க எங்களுக்குக் காலகாலமாக் கெடையாதுங்க....''

''ஏங்க அப்படி? உங்க தொகுதி எம்.எல்.ஏ. ஆளுங் கட்சிக்காரர்தானே. சொன்னீங்களா?''

''சொல்லாம என்னங்க? செஞ்சாத்தானே! எம்.எல்.ஏ. மட்டுமில்லீங்க.... முதலமைச்சர், கலெக்டர்னு போன பத்து வருஷமாவே மனு மேலே மனுவாக் குடுத்துக்கிட்டுத்தாங்க இருக்கோம். யாரு காதுல வாங்கிக்கிறாங்க? ங்கொப்புறானே.... சலிச்சுப் போச்சு, போங்க.... வாங்க, கிராமத்தை ஒரு ரவுண்டு அடிச்சுட்டு வந்து அப்புறமாப் பேசலாம்.... அதுக்குள்ள பஞ்சாயத்துத் தலைவரும் வந்திடுவாரு!''

**தே**ர்தல் நாட்களைத் தவிர மற்ற நாட்களில் சென்ற வி.ஐ.பி.கள்(!) நாங்கள்தான் என்பதால், கிராமத்துக் குழந்தைகளெல்லாம் எங்களை ஒருவிதப் பிரமிப்போடு பார்த்து ஆச்சரியப்பட்டுப் பின்தொடர்ந்து வர, கிராமத்து வீதிகளில் நடக்க ஆரம்பித்

தோம்.

அங்கங்கே தெரிந்த ஒன்றிரண்டு ஓட்டு வீடுகளைத் தவிர, அனைத்தும் கூரை வீடுகள். வெயிலுக்கும் மழைக்கும் பாதுகாப்பாக, வீடுகளின் ஓரங்களில் தாழ்வாரங்கள் இறக்கப்பட்டு பசு மாடுகளும் உழவு மாடுகளும் கட்டப்பட்டிருந்தன. புதியவர்களான எங்களைக் கண்டு மிரண்ட கன்றுக் குட்டிகள் காது மடல்களை விறைத்துக் கொண்டு நாலு கால் பாய்ச்சலில் ஓடின. வீட்டு வாசல்களிலும், கொல்லைப்புறங்களிலும், கிடந்த பெரிய பெரிய கல்லுரல்களில், பெண்களெல்லாம் நான்கைந்து பேர்களாக நின்று கொண்டு உலக்கையால் மாறி மாறி இடித்துக் கொண்டிருந்தனர்.

''அப்படிக் கூட்டங் கூட்டமா நின்னுக்கிட்டு என்னங்க இடிக்கறீங்க?''

''புளிங்க! புளியில கொட்டைங்க் இருக்குமில்ல, அதைப் பிரிச்சு எடுக்கறதுக்காகத்தான் இப்படி இடிக்கறோங்க...''

பக்கத்தில் போனோம். அவ்வளவுதான்! இடிப்பதை நிறுத்திவிட்டு முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டார்கள் அந்தப் பெண்கள்!

''நீங்க வெளியூரு பாருங்க.... அதுதான் எல்லாம் வெட்கப்படுதுங்க.... அட, என்னமோ கட்டிக்கப் போறவனைப் பார்த்த மாதிரில்ல வெட்கப்படறீங்க.... இவுங்க மெட்ராஸ்லிருந்து வந்திருக்காங்க. நம்ம கொறைங்களைப் பார்த்துப் பேப்பர்ல எழுதறதுக்காகத்தான் வந்திருக்காங்க.... எப்பவும் போல வேலையப் பாருங்க. போட்டோவெல்லாம் புடிக்கணுமாம். ம்... வேலையப் பாருங்க....''

— நம் கூட வந்தவர்கள் இப்படிச் சொன்ன பிறகுதான் அந்தப் பெண்கள் வெட்கத்தை விட்டு விட்டு, நம்மையொரு சிநேகப் பார்வையுடன் பார்த்து — லேசாகச் சிரித்து, மறுபடியும் இடிக்க ஆரம்பித்தார்கள்.



* கலைமணி



* பெரியசாமி



தம் வயதே தெரியாத மூதாட்டி: பாக்கியத்தம்மாள்.

'**நா**ன்தாங்க பஞ்சாயத்துத் தலைவர். பேரு கோடிப் பிள்ளை. ரெண்டு நாளாவே உங்களைத் தாங்க எதிர்பார்த்துக்கிட்டிருக்கோம்.... அட, ஊட்ல யாரு? இப்படி வாசல்ல ரெண்டு கட்டிலைக் கொண்டாந்து போடுங்க.... வாங்க, உட்கார்ந்து பேசுவோம்...!''

''சரி, சொல்லுங்க....''

''எங்க ஊருக்குப் பாதைதாங்க பெரிய பிரச்னை. வரும்போது நீங்களே பார்த்திருப்பீங்க. கப்பிச் சாலை கூட இல்லீன்னு எப்பம்ங்க? அத்தனையும் மணல்.... போகவே முடியாது. நாங்க பஸ் ஏறணும்னு, கிழக்குப் பக்கம் இருக்கிற மாத்தூருக்குப் போவணும். அது அஞ்சு கிலோ மீட்டர். இல்லே, தெற்குப் பக்கம் இருக்கிற செந்துறைக்குப் போவணும்னு அது எட்டு கி.மீ. வடக்குப் பக்கம் இருக்கிற திட்டக்குடி பன்னண்டு கி.மீ. மேற்குப் பக்கம் போனு ஏழு கி.மீ. அத்தனை தூரமும் நடந்தேதாங்க போவணும்...

''ஒரு அவசரத்துக்கு ஆஸ்பத்திரிக்குப் போவணும்னு செந்துறைக்குத்தாங்க போவணும். எட்டு கி. மீட்டர், நோயாளிங்க நடக்க முடியுங்களா? அட, பசங்க ஹைஸ்கூலுக்குப் போவணும்னாலும் செந்துறைக்குத் தாங்க போவணும்....''

''ஏன், உங்க ஊர்ல ஸ்கூலே இல்லையா?''

''அஞ்சாங் கிளாஸ் வரைக்கும்தாங்க இருக்கு. ரெண்டே வாத்தியாருங்கதான். அதுல ஒருத்தர் பெரும்பாலும் லீவுலதான் இருப்பாரு. பசங்க என்னத்தைங்க படிக்கும்? அதனால ரெண்டு கிலோ மீட்டர் தூரத்திலிருக்கிற குழுமூர் போய்த்தாங்க படிக்கிறாங்க. அதுவும் ஒரு ஓடையைத் தாண்டித் தாங்க போவணும். மழை பெஞ்சு வெள்ளம் வந்தா அதுவும் போவ முடியாதுங்க...''



"குழுமூர்ல கூடவா ஹைஸ்கூல் இல்லை?"

"இல்லீங்களே! அங்க எட்டாங் கிளாஸ் வரைக்குந்தாங்க இருக்கு. அட, இதையெல்லாம் விடுங்க... ரோடு இல்லை. அதனால பஸ்காரங்க வரமாட்டேங்கறாங்க. நியாயம். ரோடு வசதியில்லாததால, பக்கத்தூருக்காரங்க, எங்க ஊர்ப் பசங்களுக்குப் பொண்ணுத் தர மாட்டேங்கறாங்க. அதுவும் நியாயம்தான். ஆனா, ரோடு இல்லேங்கறதுக்காக பேங்ல லோன் கூடத் தரமாட்டேங்கறாங்க. அது என்னங்க நியாயம்?

"சத்தியமாச் சொல்றேங்க. ஜனங்களோட 'முன்னேற்றத்துக்காகத்தானே ஊர் ஊருக்கு பேங்கல்லாம் ஆரம்பிச்சிருக்காங்கனா, நம்ம ஊர்க்காரங்க போயி, மாத்தூர்லயும் செந்துறைலயும் இருக்கிற ஸ்டேட் பாங்ல லோன் கேட்டதுக்கு, 'உங்க ஊருக்கு ரோடு வசதி கூட இல்லையே, நாங்க எப்படி அங்க வந்து உங்ககிட்ட மறுபடியும் வசூல் பண்றது?'ன்னு சொல்லி, லோன் குடுக்கவே மறுத்திட்டாங்க. இது கொடுமையில்லீங்களா? நாங்க அப்படியென்னங்க பாவம் பண்ணிட்டோம்.... எங்க ஊருக்கு மட்டுமில்லீங்க இது.... பக்கத்திலிருக்கிற அங்கனூர், புதூர், சன்னாசி நல்லூர், சித்திடையார், அயன்தத்தனூர், மணப்பத்தூர், முல்லையூர்னு சுமாரா பத்தாயிரம் பேருக்கு எங்க கதியேதாங்க...." — மனம் நொந்த நிலையில் சொல்லி முடித்தார் கோடிப்பிள்ளை.

"நாங்க கடந்த பத்து வருஷமா மனுக் குடுத்துக் குடுத்துச் சலிச்சுப் போயிட்டோமுங்க. நீங்க எழுதி ஏதாவது விமோசனம் கிடைச்சாத்தாங்க உண்டு...." என்றார் கலைமணி என்பவர்.

"அப்படியே எங்க ஹரிஜனக் காலனியைப் பத்தியும் எழுதுங்க.... மழை பெஞ்சா எங்க காலனியே வெள்ளத்தில முழுகிப் போவுதுங்க...." என்றார் பெரியசாமி.

அனைவரிடமும் பேசி முடிப்பதற்குள் நன்றாக இருட்டிவிட்டது. பஞ்சாயத்துத் தலைவர் கோடிப் பிள்ளை தம்முடைய டிராக்டரை எடுத்துக் கொண்டு வந்தார்.

"வாங்க... மூணு பேரும் இப்படி பின் சக்கர மட்கார்டுங்க மேல ஏறி உட்கார்ந்துக்குங்க.... உங்க பிளஷர் நிக்கிற இடத்தில கொண்டு போய் விட்றேன். அய்யய்யோ... இப்படி ஏனோதானோன்னு உட்காராதீங்க. கெட்டியாப் புடிச்சுக்குங்க. இல்லேன்னா குலுக்கற குலுக்கல்ல அத்தனை பேரும் கீழ தான் கிடக்கணும்...." என்று எங்களை ஆனை வாரி ஓடை தாண்டிக் கொண்டு வந்து சேர்த்தார்.

மறுபடியும் நாங்கள் அந்த ரயில்வே கேட் வந்து, அந்தமையிருட்டில் தண்டவாளத்தைத் தடவிக் கொண்டே சென்று, ஸ்டேஷனில் சென்று தகவல் சொல்லி, கேட் திறந்து.... ஒருவழியாக வந்து சேர்ந்தோம்.

இந்த அவல நிலை இப்படியிருக்க, இன்னொரு அவலத்தையும் பாருங்கள். இதே அரியலூர் தாலுகாவில், சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்பு, பொன்பரப்பியிலிருந்து காரப்பாடிக்கு ஒரு கப்பிச் சாலை போட்டது நமது தமிழக நெடுஞ்சாலைத் துறை. அந்தச் சாலை மாத்தூர் ரயில்வே ஸ்டேஷனுக்கும் செந்துறை ரயில்வே ஸ்டேஷனுக்கும் இடையிலுள்ள இருப்புப் பாதையை (கி.மீ. 247/11—12)க் கடந்து செல்கிறது. அங்கு இன்னமும் லெவல் கிராஸிங் திறக்கப்படாததால் அந்தச் சாலை உபயோகமற்றுக் கிடக்கும் கொடுமை!

இதற்கு ரயில்வே நிர்வாகம்தான் காரணமோ என்று நினைத்த சித்திடையார் என்னும் ஊரைச்சேர்ந்தசிங்காரவேலு என்பவர், மத்திய ரயில்வே அமைச்சருக்குக் கடிதம் எழுத, அவர் அதைத் தென்னக ரயில்வே பொது மேலாளருக்கு அனுப்ப, அவர் கடந்த 23.12.86 அன்று சிங்காரவேலுக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்.

அதில், ரயில்வே லைனை இணைக்கும் அணுகு சாலையைத் தமிழக நெடுஞ்சாலைத் துறையினர் போடாததுதான் ரயில்வே நிர்வாகம் இன்னமும் லெவல் கிராஸிங் போடாமலிருப்பதற்குக் காரணமென்றும், அந்த அணுகு சாலையைப் போட்ட ஒரு சில தினங்களுக்குள்ளாகவே, ரயில்வே நிர்வாகம் லெவல் கிராஸிங் போடத் தயார் நிலையில் இருப்பதாகவும் குறிப்பிட்டிருக்கிறார். அந்தக் கடிதத்தைச் சிங்காரவேலு பலமுறை நமது நெடுஞ்சாலைத் துறை அதிகாரிகளிடம் எடுத்துச் சென்று காட்டியும் யாரும் அசைந்து கொடுக்கவில்லை. பிறகு எதற்காகத்தான் ஒரு நெடுஞ்சாலைத் துறை? புரியவில்லை.

**— இளங்கோவன்**

மேலட்டையில்: "இவன் காலத்திலாவது ஒரு பாதை வந்து அதை இவன் கண்ணால பார்ப்பானா" என்று கேட்கிறார் வங்காரம் கிராமத்தில் வசிக்கும் இந்தப் பாட்டி. அதே ஊரில் அந்தி நேரக் காட்சி. வண்ணப்படங்களும் திருச்சி மாவட்டச் செய்திகள் தொடர்பான மற்ற படங்களும்:

**கே.வி. ஆனந்த்**


பயங்கரவாதிகளை விடாதே! பிடி!
பயங்கரவாதிகளை விடாதே! பிடி!
பஞ்சாப் கவர்னர் ரே
ரிபைரோ
பயங்கரவாதி


ஓடிவா.. ஓடிவா..
தண்ணி.. தண்ணி..
ஓடிவா தண்ணி!
பக்கெட்டுத் தண்ணி
மூணே ரூவா தான்!
சென்னைக்கு மகாநதி நீர்


எம்.எல்.ஏ. ஏழுமலை வழங்கும் தொகுதியே உயிர் மூச்சு!
பலே பாண்டியன் நடிக்கும் சபாஷ் சபாநாயகா!
மாண்புமிகு மன்னார்சாமி நடிக்கும் கறை படாத கரங்கள்
சினிமாவில் மந்திரிகளை, எம்.எல்.ஏ.க்களை கிண்டல் செய்யத் தடைச் சட்டம்



# கல்கி

1987 மே 24
மலர் 45 . இதழ் 43
பிரபவ வைகாசி 10



## ராஜதந்திரம் இழந்த ராஜீவ்

லோங்கோவாலுடன் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட போது, ராஜீவ் எவ்வளவுக்கெவ்வளவு ராஜதந்திரத்தின் உச்சியிலிருந்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு இப்போது பஞ்சாபில் ஜனாதிபதி ஆட்சியைப் பிரகடனம் செய்த போது, ராஜ தந்திரத்தை இழந்து அடிமட்டத்தில் கிடக்கிறார்.

அங்கே மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அகாலி தள ஆட்சி நடைபெற்று வந்தது. அது உட்பூசலால் சிறிது பலவீனப்பட்டுப் போயிருந்தால் கூட இ. காங்கிரஸும் இதர தேசக் கட்சிகளும் பூரண ஆதரவு தந்து பலப்படுத்தி இருக்க வேண்டும். ஆனால் ஜனாதிபதி ஆட்சி கொண்டு வரப்பட்டதற்குக் காரணம், ஆட்சியிலிருப்பவர் பெரும்பான்மை பலம் இழந்ததுதான் என்று கூறப்படவில்லை. ஆட்சியாளரால் சட்ட ஒழுங்கை நிலைநாட்ட முடியவில்லை என்பதுதான் முக்கியக் காரணமாகக் காட்டப்பட்டிருக்கிறது.

இப்போது ஜனாதிபதி ஆட்சி வந்து விட்டதால் சட்ட ஒழுங்கு சீர்பட்டு விடுமா? சந்தேகமே. மாறாக, நிலைமை இன்னும் மோசமடையவே அதிக வாய்ப்பு. ரிபைரோவுக்கு அதிக அதிகாரங்கள் தரப்படலாம். அவரும் அடக்குமுறையைக் கையாண்டு, நூற்றுக்கணக்கானவர்களைக் கைது செய்து சிறையில் அடைக்கலாம். ஆனால் இதுவே வன்முறையை மேலும் தூண்டி விடுமே தவிர, குறைக்காது, நிச்சயம்.

பர்னாலா பயங்கரவாதிகளுக்கு மசியவில்லை. துணிந்து எதிர்த்து நின்றார். பாரதத்தின் ஒருமைப்பாட்டில் தமக்கு ஆழ்ந்த நம்பிக்கை இருப்பதைச் சொல்லாலும் செயலாலும் நிரூபித்து வந்தார். அப்படிப்பட்டவரைப் பதவி இழக்கச் செய்ததன் மூலம் சீக்கிய மக்களின் அதிருப்தியைப் பெருமளவுக்குப் பிரதமர் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார். பெரும்பாலான சீக்கியர்கள் பர்னாலாவைப் பின்பற்றினார்கள். பயங்கரவாதிகளை வெறுத்தார்கள். இப்போது இவர்களில் பலரது அனுதாபம் பயங்கரவாதிகள் பக்கமே திரும்பும். எனவே பயங்கரவாதிகளின் கொட்டம் அதிகமாகும். வன்முறை அதிகரிக்கும். ஒருவேளை, ஜனாதிபதி ஆட்சி காரணமாகச் செய்திகள் சென்ஸார் ஆகி, பல விஷயங்கள் நமக்குத் தெரிய வராமலே போகலாம், அவ்வளவுதான்!

ஜனாதிபதி ஆட்சி அமல்படுத்தப்பட்டதற்கு, நடக்கவிருக்கும் அரியானா தேர்தல் ஒரு முக்கியக் காரணம் என்பதாகப் பேசப்படுகிறது. இருக்கலாம். அரியானாவில் இ. காங்கிரஸுக்குக் கிடைக்கக் கூடிய வோட்டுக்களின் எண்ணிக்கை அதிகரிக்கலாம். ஆனால் பஞ்சாபில் அதைவிடப் பல மடங்கு அதிகமான எண்ணிக்கையில் சீக்கியர்களின் நம்பிக்கையை மத்திய அரசு இழந்து நிற்கும்.

சீக்கியர்களில் மிதவாதிகளை வைத்தே பயங்கரவாதிகளை ஒடுக்குவதுதான் ராஜ தந்திரமேயொழிய, மத்திய அரசு, பஞ்சாப் மாநிலத்தின் மீது போர் தொடுத்திருப்பது போலவும்,அடக்குமுறையைக் கட்டவிழ்த்துவிட்டு, ஆக்கிரமிப்பு நடத்தி ஆள்வது போலவும் மக்கள் மனத்தில் ஓர் எண்ணத்தை ஏற்படுத்துவது ஆபத்தான பின் விளைவுகளையே உருவாக்கும்.

பஞ்சாப் பிரச்னைக்குத் தீர்வு, லோங்கோவால் — ராஜீவ் ஒப்பந்தத்தில் இருக்கிறது. அதில் உள்ள எந்த ஷரத்தையும் நிறைவேற்றி வைப்பதில் பிரதமர் அக்கறை காட்டவில்லை. ஒப்பந்தத்தை நிறைவேற்றி வைக்கும் உத்தேசமில்லை எனில் எதற்கு அதில் பிரதமர் கையெழுத்துப் போட்டார்? ஜோத்பூர் கைதிகள் விஷயம், மாநிலங்களுக்குச் சேர வேண்டிய நிலப்பகுதிகள் பற்றிய பிரச்னை, தலைநகர் சண்டிகர் பிரச்னை, நதி நீர்ப் பங்கீடு போன்ற எந்தப் பிரச்னையிலும் மத்திய அரசு, பர்னாலா அரசுக்கு ஒத்துழைப்புத் தரவில்லை. அவ்வாறிருக்க, பர்னாலா அரசு, தனது சாதனைகள் என்று எதைக் காட்ட முடியும்?

லோங்கோவால் ஒப்பந்தம் முழுமையாக நிறைவேற்றப்பட்டால் பயங்கரவாதத்துக்குத் தேவையில்லாமல் போய்விடும். பயங்கரவாதிகளுக்குப் பஞ்சாபில் இடமில்லாமலும் போய்விடும். மக்களின் ஆதரவை அவர்கள் அடியோடு இழப்பார்கள். ஆனால் லோங்கோவால் ஒப்பந்தம் நிறைவேறத் தாமதமாகும் ஒவ்வொரு நாளும் பயங்கரவாதிகளின் கை பலப்படவே உதவும். எத்தனை ரிபைரோக்கள் வந்தாலும் அவர்களைச் சமாளிக்க முடியாது; கட்டுப்படுத்தவும் இயலாது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# 'மீகு ஏமி இந்தக் கோபம்?'

சென்னையிலேயே பிறந்து வளர்ந்து, உதவிக் கண்காணிப்பாளராகப் பணிபுரிந்து கொண்டிருந்த வசந்தகுமாரை விஜயவாடாவுக்குத் தூக்கி அடித்தார்கள். பிரமோஷன் பேரில் வேலை மாற்றம் கிடைத்ததால் அவனாலும் மறுக்க முடியவில்லை. 'இந்த மத்திய அரசு வேலையே இப்படித்தான்' என்று முனகிக் கொண்டே வேலையில் போய்ச் சேர்ந்தான். இருந்தாலும் அந்த ஊரின் பச்சைப் பசேல் வயல்களும் நதிகளும் அவனைக் கவரத்தான் செய்தன.

நாட்கள் வேகமாய் ஓடின. வேலையின் பொறுப்பும் சுமையும் நாளுக்கு நாள் அதிகமானதால் அடிக்கடி லீவு போட்டுவிட்டுச் சென்னைக்கு வர முடியாத சூழ்நிலையில் இருந்தான் வசந்தகுமார். எனவே அவனது பெற்றோர்கள் அவனுக்கு அங்கேயே ஒரு பெண்ணைப் பார்த்து மணம் முடித்து வைத்தனர். அவன் மனைவி சௌம்யா பார்க்கத் தளதளவென்றிருப்பாள். ஆனால் ஒரு குறை. தாய்மொழியாகிய தமிழில் சரியாகப் பேசத் தெரியாது. எழுதவும் வராது. இது அவனுக்கு மன வருத்தத்தைத் தந்தது. எப்படியாவது இதைச் சரிப்படுத்திவிட நினைத்தான். இதற்கென முயற்சியும் எடுத்தான். ஆனால் சௌம்யா தன் போக்கிலேயே போய்க் கொண்டிருந்தாள்.

''சௌம்யா கொஞ்சம் வாயேன்.''

''ஏமண்டி நன்னு பிலிசாரா?'' — அருகே வந்து நின்றாள். அவனுக்கு மிகவும் அதிருப்தியாய் இருந்தது.

''என்னடி இது? எப்பப் பார்த்தாலும் தெலுங்குல அக்கப்போரு. நம்ப தாய் மொழி என்ன தெலுங்கா?''

''மறசி போயிந்தண்டி.''

''திரும்பவும் பாரு.''

''மருந்து போச்சண்டி.''

''அது என்னடி மருந்து? இப்ப மருந்து மாத்திரை யார் கேட்டா? உனக்கு 'மறந்து'ன்னு சொல்லத்



தெரியாதா? எங்கே சொல்லு? 'மறந்து' ' ' — அவள் அதன்பிறகு திருத்திச் சொன்னாள்.

''அப்பா! இதைச் சொல்றதுக்கு இவ்வளவு நேரமா?'' — வசந்தகுமார் தலையில் கை வைத்துக் கொண்டான்.

அவள் ஒன்றும் புரியாமல் அவனையே உற்றுப் பார்த்தாள். ஆபீஸுக்கு நேரமாகி விட்டிருந்தது. வெளியே எட்டிப் பார்த்தான். மழை லேசாய் பெய்து கொண்டிருந்தது.

''கொடை கொண்டு வா சௌம்யா'' என்றான் அன்பாய்.

''ஏமிடி அதி?'' — அவள் மலங்க மலங்கப் பார்த்தாள்.

அவனுக்கு எரிச்சலாக வந்தது. ''ஏண்டி கொடை தெரியாது உனக்கு?'' என்று செய்கையில் காட்டினான். ''உன்னைக் கல்யாணம் பண்ணிக்கும்போதுகூட காசி யாத்திரைக்குக் கொடை பிடிச்சேனே தெரியாது? நீ இப்படியே போய்க்கிட்டிருந்தா நான் நிஜமாவே காசி யாத்திரைக்குப் போய் விட வேண்டியதுதான்.''

அதன்பிறகுதான் அவளுக்குப் புரிந்தது. ''கொடுகா.... என்று ராகம் இழுத்தாள்.

''கொடுகோ புடுகோ எதையாவது சீக்கிரம் கொண்டு வந்து தொலை.''

''மீகு ஏமி இந்தக் கோபம்?''

''பின்னே வராதா? உருப்படியா உனக்கு ஒரு வார்த்தையாவது தமிழ்ல பேசத் தெரியுதா? சரியான தலைவலி.''

''பாபம், நொப்பியா?''

''நொப்பியுமில்லை. தொப்பியுமில்லை. சும்மா ஆளை எரிய வைக்காதே!''

''தண்ணி ஊத்தண்டி.''

அவன் அதற்கு மேல் அங்கு உட்கார்ந்திருக்கவில்லை. ஓடாத குறையாய்க் குடையை விரித்துக்கொண்டு வெளியே நடந்தான்.

வீட்டுக்குத் திரும்பியபோது வசந்தகுமார் மழையில் ஏகமாய் நனைந்திருந்தான்.

சௌம்யா அவன் அருகே சென்று அன்பாய்க் காப்பி தம்ளரை நீட்டினாள்

''காப்பி குளிங்கோ.''

அவனுக்கு வந்ததும் வராததுமாய்ப் பற்றிக் கொண்டு வந்தது. ''ஏண்டி! ஏற்கெனவே மழையில குளிச்சுட்டு வந்திருக்கேன். போதாதுன்னு காப்பிலே வேறே குளிக்கச் சொல்றியா? இப்ப காப்பிக்கென்ன அவசரம்? முதல்ல துண்டச்சுக்க டவல் கொண்டு வா. உன்னோட பேசிப் பேசியே குளிர் ஜுரம்கூட வந்திடும் போலிருக்கு.''

''நாகு ஜாலிகா உந்தண்டி.''

''ஏண்டி, உனக்கென்ன கொழுப்பிருக்கும்? எனக்கு ஜுரம் வந்தா உனக்கு ஜாலியா?''

''ஐயோ அதிகாதண்டி.''

''பின்னே எது?''

''இதண்டி, கஷ்டம் மாதிரி.''

''கஷ்டம்தான். ரொம்ப ரொம்பக் கஷ்டம்.''

இரவு படுக்கப் போகும்போது அவளை அன்பாய்ப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு சொன்னான். ''நீ இப்படியே தமிழ் பேசத் தெரியாம இருக்கக் கூடாது சௌம்யா. கொஞ்சம் கொஞ்சமாவது கத்துக்கணும்.''

''எனக்கு ராதண்டி.''

''வரும். உனக்கு நல்லா வரும். நீ புத்திசாலி.''

''இப்புடு எந்துகண்டி தமிளு.''

''அப்படிச் சொல்லாதே. தாய் மொழியைக் கத்துக்கறது ரொம்ப அவசியம். இல்லேன்னா நமக்குப் பிறக்கப் போற குழந்தைக்கும் தமிழ் உணர்வே இல்லாம போயிடும்.''

''நாகு ஏமி அர்த்தம் காலேதண்டி.''

''புரியும். தமிழ் மொழியின் இனிமையைப் பத்திப் பாரதியும் திரு.வி.க.வும் எவ்வளவு உயர்வாச் சொல்லியிருக்காங்கன்னு உனக்கு இனிமேத்தான் புரியும்.''

''அதி எவரண்டி?''

''உங்க பாட்டன்.''

ஒரு காகிதத்தையும் பேனாவையும் அவளிடம் கொடுத்தான்.

''தமிழ்ல என் பேரை எழுது பார்க்கலாம்.''

''நாகு ராதண்டி.''

''சரி தொலையட்டும். உன் பேரையாவது எழுது.''

''வராதண்டி.''

''பாழாப் போச்சு.''

மறுநாள் முப்பது நாளில் தமிழ் என்ற புத்தகத்தோடு வீடு திரும்பினான். சமையலறையில் வேலையாய் இருந்த அவளிடம் ஆசையாய்க் கொடுத்தான்.

''இது எதுக்கண்டி?''

''இதை வச்சுத் தமிழ் கத்துக்க. ஒரு மாசம் கழிச்சு உனக்கொரு டெஸ்ட் வைக்கப் போறேன்.''

அவளுக்குச் சிரிப்பு வந்தது.

''சிரிக்காதே! நான் ஒண்ணும் ஜோக் அடிக்கலை. இதை நீ ஒழுங்காக் கத்துக்கிட்டாத்தான் வாராவாரம் உன்னைச் சினிமாவுக்குக் கூட்டிட்டுப் போவேன். மாசாமாசம் உனக்குப் புடைவை வாங்கித் தருவேன்.''

அவள் அந்த மாநில மொழியிலேயே நிதானமாய்ச் சொன்னாள். ''இப்ப நான் தமிழ்ல பேசிப் படிச்சு என்னங்க ஆகப் போறது? உங்களுக்குத் தெலுங்கு தெரியும். எனக்கும் அதே பாஷை நல்லாத் தெரியும். ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்கிறதுக்கும், அவங்கவங்க மனசுல இருக்கிற எண்ணத்தை வெளிப்பட நேர்த்துறதுக்கும் ஏதாவது ஒரு மொழி இருந்தாப் போதுமே.''

''ஒவ்வொரு மொழிக்கும் ஒவ்வொரு சிறப்பு அம்சம் இருக்கு சௌம்யா. இதை நீ முதல்ல தெரிஞ்சுக்கணும். தாய் மொழியில

நம்முடைய உணர்வுகளைப் பகிர்ந்துக்கும் போதுதான் நமக்குள்ள இருக்கிற உறவு சுவையுள்ளதாய் இருக்கும்.

அவள் எதற்கும் மசியவில்லை. புத்தகத்தை எடுத்து எங்கோ மூலையில் வைத்துவிட்டாள்.

வசந்தகுமார் சோர்வடைந்தான். அவனுக்கு மனமே சரியில்லை. அன்றிலிருந்து அவளுடன் பேசுவதையும் குறைத்துக்கொண்டான். அதுமட்டுமின்றி அவள் மீது அக்கறை எடுத்துக் கொள்வதையும் நிறுத்திக் கொண்டான். வீட்டுக்குக் கால தாமதமாக வர ஆரம்பித்தான். அவளுடன் சிரித்துப் பேசிக் கூட நிறைய நாட்களாகிவிட்டன.

"போஸ்ட்!"

வசந்தகுமார் அப்போது வீட்டில் இல்லை. சௌம்யாதான் வாசலுக்குச் சென்று அதை வாங்கிக் கொண்டு வந்தாள். அந்தக் கடிதம் கணவன் பெயருக்கு வந்திருந்தது. பின்னாலே உமா என்று கையெழுத்திடப்பட்டிருந்தது. ஆனால் விலாசம் இல்லை. சென்னையிலிருந்துதான் அந்தக் கடிதம் வந்திருக்க வேண்டும் என்பது மட்டும் அவளுக்குப் புரிந்தது. மூளைப் பிரதேசத்தில் சின்னக் கேள்வி ஒன்று உதித்தது.

"யார் இந்த உமா?"

ஆபீஸிலிருந்து கணவன் திரும்பி வந்ததும் அந்தக் கடிதத்தை அவனிடம் தந்தாள்.

"லெட்டர் வச்சிருந்தி."

அவன் அதை வாங்கித் திருப்பிப் பார்த்தான். பின்னாலே எழுதப்பட்டிருந்த பேரைக் கண்டதும் அவன் முகம் பிரகாசமாயிற்று. உட்கார்ந்து நிதானமாய் அதைப் பிரித்தான். ஏதோ ஒரு பொக்கிஷத்தைக் கண்டுவிட்டவன் போல அவன் கண்கள் கடிதத்தில் நிலைகுத்தி நின்றன. ஆடாமல் அசையாமல் ஒவ்வொரு வரியாய்ச் சுவைத்துப் படித்தான். அவள் கொண்டு வந்து வைத்த காப்பி கூட ஆறிப் போய்விட்டது.

"ஏமண்டி காப்பி ஆறிப் போவுது."

அவன் அவளது வார்த்தையைப் பொருட்படுத்தவில்லை. படித்து முடித்ததும் அந்தக் கடிதத்தைப் பத்திரமாய், பாக்கெட்டில் வைத்துக் கொண்டான். காப்பி குடிக்காமலேயே அவனுக்கு உற்சாகம் திரண்டு வந்தது.

"யவரண்டி அதி?" ஆவல் ததும்பக் கேட்டாள் சௌம்யா.

"என் பிரெண்ட்.

"மீகு கேர்ள் பிரெண்ட் கூட இருக்கா?"

அவன் சட்டெனச் சுதாரித்துக் கொண்டான். "கேர்ள் பிரெண்ட் இல்லை. உமா மஹேஸ்வரன்னு என் ஓல்ட் க்ளாஸ்மேட். உமான்னு ஷார்ட்டா எழுதியிருக்கான்."

அவளுக்கு அவன் பேச்சில் நம்பிக்கை வரவில்லை. அவளது முகபாவமே காட்டிக் கொடுத்தது.

இரண்டாவது கடிதம் வந்தது. ஆனால் அதை அவன்தான் வாங்கினான். அதே உமா. பின்னாலே அதே கையெழுத்து. அதையும் அணு அணுவாய் ரசித்துப் படித்தான்.

அவளது சந்தேகம் இன்னும் வலுவடைந்தது.

அவன் உறங்கிக் கனவுகள் கண்டு கொண்டிருந்தபோது மெள்ள எழுந்து அவனுடைய சட்டைப் பாக்கெட்டில் கைவிட்டு அந்தக் கடிதத்தை எடுத்தாள். ஓசைப்படாமல் பிரித்தாள்.

தமிழில் முத்துமுத்தான கையெழுத்து. ஓரிரு எழுத்துக்களே அவளுக்குத் தெரிந்திருந்தன. இதில் இருக்கும் விஷயங்கள் என்னவாக இருக்கும்?

ராத்திரி பூராவும் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. வசந்தகுமார் வாங்கித் தந்த புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டாள். ஒவ்வொரு எழுத்தாய்ப் புத்தகத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தாள். அப்போதும் அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. எனினும் சௌம்யா நம்பிக்கையை இழக்கவில்லை. கணவன் தினமும் ஆபீஸுக்குப் போயிருக்கும் நேரங்களிலெல்லாம் ரகசியமாய் ஒவ்வொரு எழுத்தாய்க் கற்று வந்தாள்.

இரண்டு மூன்று மாதங்களுக்குப் பிறகு திரும்பவும் அப்படியொரு கடிதம் வந்தது. ஆனால் சௌம்யாவின் கைக்கு அது கிடைக்கவில்லை. அதற்காகவே ஆபீஸுக்குப் போகாமல் காத்திருந்த வசந்தகுமார், தபால்காரனிடமிருந்து அந்தக் கடிதத்தைப் பெற்றுக் கொண்டு வெளியே போய்விட்டான். வழக்கம் போல இரவு தாமதமாக வீட்டுக்கு வந்து படுத்துக் கொண்டான். சில நிமிடத்துக்கெல்லாம் குறட்டை சப்தம் கேட்டது. அந்த அளவுக்கு அவன் களைத்துப் போயிருக்கிறான் என்பதை அவள் புரிந்து கொண்டாள்.

தூக்கம் வராத சௌம்யா மெள்ள எழுந்தாள். சிரம் முதல் பாதம் வரை அவனையே கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்தாள். பிறகு ஹேங்கரில் தொங்கிக் கொண்டிருந்த அவனது சட்டைப் பாக்கெட்டில் கைவிட்டுப் பார்த்தாள்.

அந்தக் கடிதம் அதிர்ஷ்டவசமாய் இருந்தது. பதற்றத்துடன் அந்தக் கடிதத்தைப் பிரித்தாள். சிரமமின்றி அவளால் அப்போது எழுத்துக் கூட்டிப் படிக்க முடிந்தது.

'அருமை சௌம்யாவே! ஆத்திரம் கொள்ளாதே! இந்தக் கடிதம் எந்தப் பெண்ணிடமிருந்தும் வரவில்லை. இதை நானே எழுதினேன். உன்னுள் சந்தேகத்தை உண்டு பண்ணி, பொறுமையைத் தூண்டி விட்டுத் தமிழைக் கற்க வைப்பதற்காகவே நான் செய்த ஏற்பாடிது. இப்பவாவது உனக்குப் புத்தி வந்ததே. அதற்கு நன்றி. பாராட்டுக்கள். இனிய முத்தங்கள். — வசந்தகுமார்.'

ஏக கலவரத்தில் வதங்கிப் போயிருந்த அவளது முகம் மெள்ள தாமரையாய் மலர, உறங்குவது போல் படுத்திருந்த வசந்தகுமார் மெள்ளக் கண்களைத் திறந்து ஓரக் கண்ணால் அவளைப் பார்த்தான்.

# ஜெயசக்தி

வழங்கும்

விசேஷ அன்பளிப்புகளுடன் இணைந்த

# டெபாசிட் சேகரிப்பு விழா!

(1-4-1987 முதல் 31-5-1987 வரை)

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

| 3 மாதங்கள் | 6 மாதங்கள் | 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் |
|---|---|---|---|---|
| 12% | 15% | 19% | 20% | 21% |

தொடர்பு கொள்ளவும்

## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

(தமிழ் நாடு)

39, நடேசன் தெரு (2-வது மாடி) சிவா-விஷ்ணு கோயில் அருகில்

தி.நகர், சென்னை-600 017. போன் : 442218/445494

| | | |
|---|---|---|
| மதுரை | : | 41, வடக்கு வெளி வீதி, (முதல் மாடி) மாடர்ன் லாட்ஜ் ஷாப்பிங், மதுரை-625 001. போன் : 36004/34369 |
| திருச்சி | : | 22, மதுரை ரோடு, (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில், திருச்சிராப்பள்ளி-620 008. போன் : 31376/33397 |
| கோயமுத்தூர் | : | 666, ராஜா தெரு, (முதல் மாடி) கோயமுத்தூர்-641 001. போன் : 34369 |
| பாண்டிச்சேரி | : | 11, கேரு தெரு, (கனரா வங்கி எதிரில்) 2-வது மாடி, பாண்டிச்சேரி-605 001. போன் : 6493/6471 |
| திருநெல்வேலி | : | 9-G, திலக் நகர், மதுரை ரோடு, திருநெல்வேலி-627 001. போன் : 25785 |
| தஞ்சாவூர் | : | எண் : 2 & 3 முதல் மாடி, ஜி.ஏ. கனால் ரோடு, தஞ்சாவூர்-613 001. போன் : 21626/22286 |
| திருவண்ணாமலை | : | 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன் : 2483 |
| பட்டுக்கோட்டை | : | 121, தலையாரி தெரு, (முதல் மாடி) பட்டுக்கோட்டை-614 601. போன் : 453 |
| பெங்களூர் | : | 24/1-A, மார்கோஸா ரோடு (10-வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன் : 366971 |
| கும்பகோணம் | : | 12, கிழக்கு சாரங்கபாணி தெரு, கும்பகோணம்-612 001. |

LOTUS/JF/110

**ஜெயசக்தி - திட்டமிட்ட வளர்ச்சிக்கு**



## 7

ஒரு ஜூலை மாதம், வேலை செய்த துணி மில்லில் தனியே கூப்பிட்டு, 'இம்மாத இறுதியில் நீங்கள் ஓய்வு பெறுகிறீர்கள்' என்று சொன்னார்கள்.

"ஏன்? நான் திடமாகத்தானே இருக்கிறேன்."

"மிகத் திடமாக இருக்கிறீர்கள். ஆனால் உங்களுக்கு ஐம்பத்தாறு வயது ஆகி விட்டது."

"இருபத்தியாறு வயது பஞ்சாபியை என்னால் புரட்டிப் போட முடியும்."

"முடியலாம். ஆனால் ஐம்பத்தாறு வயது ஆகிவிட்டது."

"என்னால் இன்னும் தொடர்ந்து பத்து வருடங்கள் வேலை செய்ய முடியும்."

"வொய் நாட், எழுபது வயது வரைக்கும் கூட நீங்கள் திடமாக வேலை செய்ய முடியும். இரண்டாம் உலகப் போர் பாப்புலராயிற்றே நீங்கள். ஆனால்...."

"ஆனால்.....?"

"ஏன் வேலை செய்ய வேண்டும் சங்கரன். இதுவரை உழைத்தது போதாதா? எதற்கு நீங்கள் இன்னமும் வேலை செய்ய வேண்டும். மறுபடி உலகம் சுற்றுங்கள். அல்லது பெண்ணுக்குத் திருமணம் செய்யுங்கள். பேரன், பேத்திகளுக்குக் கணக்குச் சொல்லிக் கொடுங்கள். உலகத்தில் துணி மில் வேலையை விட உயர்த்தியாய் ஆயிரம் வேலைகள் இருக்கின்றன."

புரிந்தது.

வேலையில்லாமல் பம்பாயில் வசிப்பது கொடுமை. பரபரப்பான அந்த நகரம் வெறுமனே உட்கார்ந்திருக்கிறவனை எள்ளி ஏளனம் செய்யும். பெண்ணின் பள்ளியிறுதிப் படிப்பு முடியும் வரை பம்பாயில் தங்கினார். பிறகு குடும்பத்தோடு சென்னை வந்தார்.

மோடா, மண் கூஜா, மடக்குக் கட்டில், சாய்பாபா படம், ஹிந்தி வாரப் பத்திரிகைகளோடு சங்கரன் குடும்பம் சென்னை வந்தது. அண்ணாமலைபுரத்தில் வீடு பார்த்துத் தங்கிய இரண்டு மாதத்தில், அதே பகுதியில் இன்னொரு வீடு விலை பேசிற்று. குடி பெயர்ந்தது.

இனி சென்னைதான் சொந்த ஊர், மைலாப்பூர்தான் சுடுகாடு.

லலிதா, ஸ்டெல்லாமாரிஸில் சேர்ந்தான். ஸ்டாக்கிங்ஸும், டபுள் மிடியும், சின்ன ஹைஹீல்சும் போட்டுக் கொண்டு கல்லூரி போனபோது, பெண்களே 'வாவ்' என்றார்கள். காதுப் பித்தளையைத் தொட்டுப் பார்த்து எங்கு வாங்கியது என்று வியந்தார்கள். 'ஆஜாரே' என்று மதுமதி பாட்டுப் பாடிய போது, புரியாமல் போனாலும் கண் கிறங்கிக் கேட்டார்கள்.

ஸ்டெல்லாமாரிஸில் பியானோ இருந்தது. அங்கு பியானோ வகுப்புகள் உண்டு. மாணவிகள் அரிது. லலிதா மற்ற பாடங்களை மேம்போக்காக எடுத்துக் கொண்டான். பியானோவில் மூழ்கினாள்.

நான்காவது க்ரேட், ஐந்தாவது க்ரேட் என்று பரீட்சைக்குப் போனாள். கல்லூரி அவளைப் பெருமையாக நினைத்துக் கொண்டது.

# நிழல் யுத்தம்

பாலகுமாரன்



சங்கரனுக்குச் சென்னையிலுள்ள மோட்டார் சைக்கிள் கம்பெனியில், செக்யூரிடி மேற்பார்வை உத்தியோகம் கிடைத்தது. கௌரவ உத்தியோகம். கௌரவமான சம்பளம். சங்கரனுக்குக்காசு இப்போது முக்கியமில்லை. பங்குகளும் முதலீடுகளும் தங்க நகைகளும் சௌகர்யமாய் இருந்தன. நகைகளை விற்று நிலம் வாங்கி, நிலங்களை விற்று மீண்டும் நிலங்கள் வாங்கிச் சென்னையை விரிவாக்கியதில் சங்கரனுக்கும் பங்கு உண்டு.

வாழ்க்கையில் 'பெண்ணின் கல்யாணம் மட்டுமே சுமை' என்கிற மனக்கிலேசம் தவிர, வேறு எந்தச் சிரமமுமின்றி நகர்ந்து கொண்டிருந்த ஒரு புதன் கிழமை, சங்கரன் மனைவி சௌந்தரம், ஹீட்டர் வெந்நீரில் மின்சாரம் பாய, சுற்றிய புடைவையோடு சின்னக் கூவல் கூட இல்லாமல் செத்துப் போனாள்.

எமன் என்ற எதிரி உருவமாய் நின்று வீழ்த்தினான். பின்னால் தாக்கினான்.

இடக்கை முஷ்டியை மடக்கி உயர்த்திப் பிடி. இப்போது சுண்டுவிரல்மேட்டை ஒற்றை வில்லோ மரத்தில் பொருத்து. ஆள் காட்டி விரல் மேடு மலையருகே நிற்கும். இடைப்பட்ட இடம் எதிரியின் இருப்பிடம். கட்டைகள் டிகிரிக் கணக்கில் வரும்போது, இரவோடு இரவாகச் சுள்ளி உடையும் சத்தம் கூடக் கேட்காமல் மரணம் நோக்கிப் போனதுண்டு. பீரங்கி இடியோசையும் நெருப்பும் தெரிய அதுவே வழிகாட்டியாய், சாவுக்கு வெகு அருகில் வாழ்ந்ததுண்டு. இப்படிப் பல் தேய்த்துக் குளிக்கும்போது சாவு மூட்டுமா? குரல் கூட எழுப்பாமல் உயிர் பறிக்குமா? மரணம் சாதாரணம். ஆனால் மனைவியின் சாவு! சாவு நேர்ந்த விதம்? அழக் கூட முடியவில்லை. அழுது ஓய்ந்திருந்தால் தெளிவாகப் போயிருக்கும். அழாது இறுக்கிக் கொண்டது உள்ளே வடுவாய் மாறித் தடவத் தடவ துக்கம் கொடுத்தது.

மகளுக்குத் தனியே நின்று எப்படித் திருமணம் முடிக்கப் போகிறோம் என்கிற கவலை வந்தது. சமையலுக்கு ஒரு மாமி கிடைத்தது போல, தோட்டக் காவலுக்கு ஒரு கிழவன் கிடைத்தது போல, வீடு பெருக்க, பாத்திரம் தேய்க்க ஒரு சிறிய பெண்குட்டி கிடைத்தது போல, நன்றியும், விசுவாசமுமாய் ஒரு மாப்பிள்ளை கிடைப்பானா என்று மனது ஆசைப்பட்டது.

''ஏண்டா, நீ யாரையாவது மனசில நினைச்சுண்டிருக்கியா?'' லலிதாவை நோக்கிக் கேட்டார்.

''நானா....? ஏன் இப்படிக் கேக்கறே?''

''இல்லே, என் வேலை சுலபமா முடியுமே!''

''இல்லப்பா, ஒருத்தனும் இங்கே சரியில்லே.''

''ஏன் லலிதா?''

''என் சிநேகிதிகள் லவ் பண்றதைப் பார்க்கறேனே! சுத்து, சுத்துன்னு சுத்தரும்ப்பா

# 7

(அத்தியாவசியமான இடைச் செருகல்)

"அப்புறம் என்னய்யா? அந்த சராகா மானேஜர் சிவம்தான் சாவியை எடுத்துக் கொடுத்து, ரகசிய ஃபைல்களைப் பார்த்துக் கொள்ளும்படி அருணிடம் சொல்லிவிட்டாரே! அவன் தனக்குத் தேவையான அந்த மருந்து ஃபார்முலாவை எடுத்து, லேகாவிடம் தந்துவிட வேண்டியதுதானே? கதை முக்கால் வாசி முடிந்துவிட்டது போலிருக்கிறதே!" என்று கதை சொல்லி வந்த வேதாளத்திடம் குறுக்குக் கேள்வி கேட்டார் அற்புதசாமி.

வேதாளம் நாளொன்றுக்கு அரை டஜன் ஜர்தா பீடா போட்டுக் காவியேறிய பற்களைக் காட்டிப் பகபகவென்று சிரித்தது. "உமக்கு அவசரசாமி என்று பெயர் வைத்திருக்கலாம்.... சரி, ஃபார்முலா சுலபமாகக் கிடைத்து விடுகிறது என்றே வைத்துக்கொள்வோம்.... இன்னும் எத்தனை முடிச்சுகள் போட்டு வைத்திருக்கிறேன்.... அதையெல்லாம் அவிழ்க்க வேண்டாமா?"

"அதென்ன பிரமாதம்! சிவத்தைப் போல இன்னும் சில பேர் கதையிலே மூக்கை நீட்டி சத்யாவுக்கும் அருணுக்கும் உதவி செய்தால் முடிச்செல்லாம் தன்னாலே அவிழ்ந்து போகிறது....! என்கிட்டே விட்டால் நானே மீதிக் கதையைச் சொல்லி முடிக்கிறேன்!"

வேதாளம் அற்புதசாமியை அலட்சியத்துடன் பார்த்தது. "சரி, நீர் கதை சொல்லும்; நான் கேட்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. எங்கேயாவது உமக்குத் திணறல் ஏற்பட்டுக் கதை சொல்லத் திண்டாடினால் என்னிடம் விட்டு விட வேண்டும்! சரியா?"

அற்புதசாமி ஒப்புக் கொண்டு, சொல்ல ஆரம்பித்தார்.

வழக்கப்படி, போன் காலை எதிர்பார்த்துப் பச்சை நிறக் கார்ப்பெட் விரித்த அறையில் நடைபயின்று கொண்டிருந்தார் அந்தப் பெரிய மனிதர்.

நேரம் ஆக ஆக, எல்லாம் நல்லபடியாக நடந்து முடிய வேண்டுமே என்ற கவலை அவரை அரிக்கத் தொடங்கியது. போன் கால் வராமலே போய் விடுமோ என்ற சந்தேகம் வேறு அவ்வப்போது எழுந்து பயமுறுத்திக் கொண்டிருந்தது. சந்திப்பு உண்டா இல்லையா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளலாமென்றால், எந்த நம்பருடன் தொடர்பு கொள்ள வேண்டும் என்பது கூட அல்லவா அவருக்குத் தெரியாது!

கையைப் பிசைந்து கொண்டார். கட்டிலுக்கு அருகே சிறிய மேஜை மீதிருந்த பெட்டியிலிருந்து ஒரு சுருட்டை எடுத்து, நுனியைக் கடித்துத் துப்பி, வாயில் வைத்துப் பற்ற வைத்துக் கொண்டார். உயர்ந்த வர்ஜினியா புகையிலையின் மணத்தை அனுபவிக்கத் தொடங்கினார்.




மூன்று முறை கூட உறிஞ்சியிருக்க மாட்டார். போன் ஒலித்தது.

"ஐயா! நான்தாங்க முப்பத்திரண்டு பேசறேன்!"

"பல்லைக் காட்டாதீர்! இங்கே என் மேலே வந்து இடிக்கிறது!" என்று கிண்டல் செய்தது மறுமுனைக் குரல்.

"சொல்லுங்க ஐயா! பார்ட்டியை எங்கே பார்க்கலாம்?"

"எங்கேயும் பார்க்க முடியாது!"

"ஏனுங்க ஐயா?"

"பார்ட்டி கொண்டு வந்த பணம் பறி போய்விட்டது!"



"எப்படி ஐயா? எப்படி?"

"பார்ட்டி ஹோட்டலில் வந்து நுழைந்திருக்கிறார்.... அவர் வரப் போவதை எப்படியோ மோப்பம் பிடித்துக் காத்திருந்து, பணத்தைத் தட்டிக் கொண்டு போய் விட்டான் அந்த ராஸ்கல்!"

"யாருங்க அது?"

"பெயர் சொன்னால் தெரிந்து விடுமா உமக்கு.....? உடனே அவனைத் தேடிப் பிடித்துத் தீர்த்துக் கட்டி விடுவீராக்கும்!"

"உத்தரவு கிடைத்தால் முயற்சி பண்ணிப் பார்க்கலாம்ங்க. எனக்கு டிரேட் யூனியன் புள்ளிகள் சிலரைக் கணக்குத் தீர்த்த அனுபவம் உண்டுங்க...."

"அப்படியா! பெயர் சொல்றேன்: சத்யா!"

"ஆள் எப்படி இருப்பானுங்க?"

"தமிழ்ச் சினிமா பார்க்கிற வழக்கம் உண்டா?"

"இந்த ஏழைக்கு அதுக்கெல்லாம் நேரம் ஏதுங்க?"

"சினிமாப் பத்திரிகையாவது பார்ப்பீரா?"

"எப்பவாவது புரட்டுவேனுங்க...."

"டி. ராஜேந்தர்னு ஒரு பிரபல ஆசாமி.... அவரைப் போலவே இந்த சத்யாவும் இருப்பான்... தாடி, மீசை உண்டு.... கறுப்புக் கண்ணாடி போட்டிருப்பான்...."

"ராத்திரியிலே கூடவா?"

"கிண்டலா....? அந்த சத்யா அகப்படுகிறானா, பாரும்!"

"சரிங்க ஐயா!"

பெரிய மனிதர் போனை வைத்தார். மணியடித்து வேலையாளை அழைத்தார். "இந்த மாசம் வந்திருக்கிற தமிழ்ச் சினிமாப் பத்திரிகை அத்தனையையும் வாங்கிட்டு வா! ஓடு!" என்று சொல்லி சில்க் ஜிப்பா பாக்கெட்டிலிருந்து நூறு ரூபாய்த் தாள் ஒன்றை எடுத்து வீசினார்.

"என்ன, ஏதாவது நியூஸ் உண்டா?"—லேகா கேட்டாள்.

அருணும் லேகாவும் பிரபல ஹோட்டல் ஒன்றின் ஏ.ஸி. அறையில் உட்கார்ந்திருந்தார்கள். அந்த ஹோட்டலில் தயாராகும் சிற்றுண்டிகள் எத்தனை பிரசித்தமோ அத்தனை பிரசித்தம் சர்வர்களின் மெத்தனமும். இதன் காரணமாகவே பேசுவதற்கு நிறைய விஷயங்கள் உள்ளவர்களே அங்கு டிபன் சாப்பிட வருவார்கள். பெண்ணைப் பெற்றவர் ஒருவர், ஒரு பிளேட் போண்டா சாம்பாருக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு, அது வந்து சேர்வதற்குள் பிள்ளையின் தந்தையுடன் கல்யாண சம்பந்தமே பேசி முடித்துவிட்டதாகச் சொல்வார்கள்....

"நியூஸ்தானே? நிறைய இருக்கிறது!" என்றான் அருண் மெனு கார்டைப் பிரித்தபடி. "ரகசிய ஃபைல்கள் உள்ள காபினெட்டின் சாவியே என் கைக்குக் கிடைத்து விட்டதாக்கும்!"

"வெரிகுட்! ஃபார்முலா பேப்பர்கள் ஏதேனும் கண்ணில் பட்டதா?"

"ஏகப்பட்ட ஃபார்முலாக்கள்.... ஆனால் எது எந்த மருந்துக்கு என்று கண்டுபிடிக்க முடிந்தால்தானே? எல்லாமே கெமிக்கல் பெயர்கள், சிம்பல்களாக இருக்கின்றன!"

"நீங்கள் பி.எஸ்ஸி கெமிஸ்ட்ரிதானே? உங்களுக்குக் கொஞ்சமாவது புரியாதா?"

"விஷயம் தெரியாமல் பேசாதே லேகா! நான் ஃபர்ஸ்ட் கிளாஸ்லே பாஸ் பண்ணினதே ஒருவித அதிர்ஷ்டம்தான்!"

"எப்படி?"

"நான் பரீட்சை எழுதின அதே வருஷம் ஒரு மினிஸ்டருடைய பையனும் பி.எஸ்ஸி எழுதியிருந்தான்.... அவன் ஒற்றைப் படையிலே மார்க் வாங்கவே, எல்லாருக்கும் ஐம்பது மார்க் கூட்டிப் போடணும்னு மினிஸ்டர் உத்தரவு போட்டுட்டார். அப்படிப் போட்டதிலேதான் எனக்குப் ஃபர்ஸ்ட் கிளாஸ் மார்க் கிடைத்தது. இல்லையென்றால் நான் பெயிலாகித் தொலைச்சிருப்பேன்!"

"சரி, ஒன்று செய்யுங்களேன். எல்லா ஃபார்முலா பேப்பர்களையும் எடுத்து என்னிடம் தந்துவிடுங்கள்!"

"ஐயோ! ஆறேழு ஃபைல்களை அப்படியே அபேஸ் செய்வதாவது! அது நடக்காது, லேகா!"

"போகட்டும்... கொஞ்சம் கொஞ்சமாக எல்லா ஃபார்முலாக்களுக்கும் ஜெராக்ஸ் காப்பி எடுத்துவிட்டால்....?"

"அதற்கும் நிறையப் பேப்பர்களை ஆபீஸிலிருந்து வெளியே கொண்டு வர வேண்டியிருக்குமே? அது ஆபத்தான விஷயம்!"

லேகா ஒரு விநாடி யோசித்தாள். "ஓகே! இப்படிச் செய்வோம். எங்கப்பாவிடமிருந்து மைக்ரோ ஃபிலிம் கேமரா வாங்கி வந்து தரேன்... எல்லாவற்றையும் 'கிளிக்' பண்ணிக் கொடுத்து விடுங்கள்!"

"அதுதான் சுலபமான வழி!" என்று அருணும் ஒப்புக்கொண்டு நாற்பது நிமிடம் வேறு பேச்சுக்களில் கழித்த பின்னர், கட்லெட் வந்து சேரவும், வெட்ட ஆரம்பித்தார்கள்.

மறுநாள் லேகா கேமராவைக்



**தூதுவன்: நடந்து முடிந்த போரில் இரண்டுபக்கமும்சமமாகச்சேதம்அடைந் திருப்பதாக அந்நாட்டு அரசர் கூறு கிறார் அரசே!**

**அரசன்: அதனால்?**

**தூதுவன்: போரை டிராவில் முடிந்ததாக அறிவிக்கச் சொல்கிறார்!**

**— புதூர் ஆர். பிரசாத்**

கொண்டு வந்து கொடுத்ததுடன் அதை எப்படி இயக்க வேண்டும் என்றும் சொல் லிக் கொடுத்தாள். அருண் ஏற்கெனவே எடுத்து வைத்திருந்த ஃபைல்களைத் தன் அறையில் வைத்து, ஒருவரும் பார்க்காத நேரத்தில் போட்டோ எடுத்தான். மாலையில் கேமராவை லேகாவிடம் கொடுத்தான். "ரொம்ப தாங்க்ஸ் அருண்! நாளைக்குப் புது சாக ஃபிலிம் லோட் பண்ணிக் கொண்டு வருகிறேன்!" என்றலேகாவின் உதட்டோரப் புன்னகையிலும்ஒருகோணல்பார்வையிலும் சிக்கிக் கொண்டு அன்றிரவெல்லாம் தூக்க மின்றித் தவித்தான்.

இரண்டாம் நாளும் முடிந்த வரையில் ஃபார்முலாக்களைப் படமாக்கினான். முதல் நாளை விட அன்று இடையூறுகள் அதிக மிருந்தன. யாராவது எதையாவது கேட்டுக் கொண்டு அடிக்கடி அறைக்குள் வந்து போனார்கள்.

ஒருவழியாக நான்கு நாட்களுக்குள் எல்லா ஃபார்முலாக்களையும் போட்டோ எடுத்துக் கொடுத்துவிட்டான்.

அவனுக்கிருந்த ஆச்சர்யமெல்லாம் ஒரே ஒரு விஷயத்தில்தான். சாவிக் கொத்தைத் தன்னிடம் தூக்கிக் கொடுத்த மானேஜர் சிவம் அதைத் திருப்பிக் கேட்கவே இல்லை யே — ஏன்? ரகசிய ஃபைல்களை அவன் அடிக் கடி தன் அறைக்கு எடுத்துச் செல்வதைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந் தும், 'ஜாக்கிரதையாகக் கையாளு! என்றோ அல்லது வேறுவிதமாகவோ எச்சரிக்கை எதுவும் செய்யவில்லையே — ஏன்? ஆர்வக் கோளாறினால் அலாரமணிக்கு ஒரு தரம் லேகா அவனது அறைக்குப் போவதைக் கண்டும் காணாதது போலிருந்தாரே — ஏன்?

ஏன்? ஏன்? ஏன்?

மேலும் இரண்டு நாள் கழித்து லேகா அவனிடம் வந்தாள். முகத்தில் வழக்கமான உற்சாகமில்லை.

"அருண்!நம்மமுயற்சியெல்லாம்வேஸ்ட்! நீங்கள் போட்டோ எடுத்துக் கொடுத்த எதிலும் எங்க அப்பா தேடுகிற விஷயம் இல்லை.... வேறு இடத்தில்தான் தேடிப் பார்க்க வேண்டும்...." என்று வருத்தத்துடன் அவள் சொன்னபோது, அருணின் மூளைக் குள் ஆயிரம் வாட் பல்பு ஒன்று பிரகாசித் தது. ரகசியம் என்று குறிக்கப்பட்ட ஃபைல் களில் அவன் தேடுகிற ரகசிய ஃபார்முலா நிச்சயமாக இல்லை என்பது தெரிந்துதான் சிவம் அவ்வளவுதாராளமாக நடந்துகொண் டிருக்கிறார் போலிருக்கிறது!

"என்ன! ஆட்டு மந்தையையே திருடிய வன் போல விழிக்கிறீர்களே! நான் சொன்ன விஷயம் மூளையிலே பதிவாயிற்றா இல்லை யா....?"

தலையாட்டினான். "மேலே என்ன செய்ய லாம் லேகா? யாரைப் போய்க் கேட்பது? அதுதான் யோசனையாக இருக்கிறது...."

அவனுக்குப் பதில் சொல்வது போல, மேஜை மீதிருந்த போன் ஒலிக்கவும், எடுத் துக் கேட்டான்.

"முட்டைக் கண்ணு! நான்தான்!" — என்ற சத்யாவின் குரலைக் கேட்டதும் உடம்பில் தனி உற்சாகம் ஊற்றெடுத்தது.

"சொல்! என்ன விஷயம்?"

"மெரீனாவிலே உழைப்பாளர் சிலை இருக் கிறதல்லவா?"

"பேஷாக, திடமாக, இருக்கிறது.... பத்து நாளைக்கு முன்னாலே கூடப் பார்த்தேன்... அதற்கென்ன?"

"அந்தச் சிலைக்குப் பின்னால் கொஞ்சம் தள்ளி, மணலில் உட்கார்ந்திரு.... இன்று சாயந்தரம் ஆறரை.... வர்றியா?"

"வந்தால் என்ன தருவாய்?"

"வந்து பார், தெரியும்!"

"சரி, கட்டாயம் வரேன்!" — போனை வைத்தான்.

லேகா குறும்புச் சிரிப்புடன் கேட்டாள். "எங்கேஜ்மெண்ட்டாக்கும்? எங்கே? யாரைச் சந்திப்பதாக உத்தேசம்?"

"பீச், காதலி, இச்.... இச்....!"

அவள் பொய்க் கோபம் காட்டி விட்டு எழுந்து போனாள்.

கடற்கரை மணல் இன்னும் சூடாக இருந்தது. அருணின் கண்கள் கலங்கரை விளக்கத்தின் விளக்குக்குப் போட்டியாக நாலாபுறமும் சுழன்று சுழன்று சத்யா வரு கிறாளா என்று வலை வீசின. மனமோ, 'எதற் காக வரச் சொல்லியிருப்பாள்?' என்று பல வித கற்பனைகளில் ஈடுபட்டிருந்தது.

சுண்டல், முறுக்கு, வேர்க்கடலை வியா பாரிகள் 'மொய்த்தார்கள். எல்லாரையும் விரட்டியடித்தான். எதிரிலிருந்த மணலைக் கோபுரம் போல் குவித்தும் கலைத்தும் வெட்டிப் பொழுது போக்கினான். மணி ஏழும் ஆகிவிட்டது. இன்னும் ஓர் ஐந்து நிமிஷம் பார்த்துவிட்டுப் புறப்பட வேண்டி யதுதான் என்று தீர்மானம் செய்து கொண் டான்.

This scheme is valid from 1.5.87 to 31.5.87 only.

# You are Gifted

## With the advent of

# TAMIL NEW YEAR




**ANNAMALLAI Group Company announces the following gift schemes to New Depositors.**



For deposit of Rs. 10,000/- and above
**LADIES LEATHER HAND BAG.**

For deposit of Rs. 5,000/- and above
**LEATHER POUCH or 10 GRAMS OF SILVER MEDALLION**









For deposit of Rs. 3,000/- and above **LEATHER MONEY PURSE or 5 GRAMS OF SILVER MEDALLION**

**Scheme – I FIXED DEPOSIT**

| Minimum Amount of Deposit | Period | Interest per annum |
|---|---|---|
| Rs. 1,000/= (Any addition to be in multiples of Rs. 500/=) | 1 year<br>2 years<br>3 years | 14% |
| Interest payable monthly | | |

**Scheme – II CASH CERTIFICATE**

| Amount of Deposit Rs. | Period | Maturity Amount Rs. | Annual Yeild % |
|---|---|---|---|
| 1,000 | 1 Year | 1,149 | 14.93 |
| | 2 Years | 1,321 | 16.05 |
| | 3 Years | 1,518 | 17.25 |
| Rs.10,000 – deposited in our CASH CERTIFICATE SCHEME will become Rs.15,180/- in 3 years. | | | |

Application forms can be had from our Registered Office/office of all important Brokers in your Town and from our following branches:

- Continental Plaza, I Floor, 705, Mount Road, Madras - 6. Ph 82430
- Arunodhaya Building, 26/27, Poonamallee High Road, Madras - 3. Ph 31788/31513
- S. N. High Road, Tirunelveli Junction, Tirunelveli - 1. Ph 24581
- 4-A Birds Road, Trichy - 1. Ph 27000/23222 (3 Lines)
- 310-311 Trichy Main Road, Salem - 6. Ph 69100/67000
- 38, Mahamonbu Agraharam, Karaikudi - 1. Ph 3029
- Maneesh Tower, J. C. Road, Bangalore - 2. Ph 221213
- Rajabahadur Mansion, 28 Bombay Samachar Marg, Bombay - 23. Ph 275389
- 30-A Sathy Road, Opp. C. N. College, Erode - 4. Ph 78100
- PSK Building, 36/185 Chittur Road, Ernakulam, Cochin - 11. Ph 360425
- 246-C, Aruppukottai Main Road, Avaniapuram, Madurai - 12. Ph 24450
- 225, Mysore Main Road, Sathyamangalam - 1. Ph 416
- 61-A, Arcot Road, Vellore - 12. Ph 22320/24300



**ANNAMALLAI INVESTMENTS COMPANY**

(GROUP OF **ANNAMALLAI FINANCE LIMITED**)

252, METTUPALAYAM ROAD, COIMBATORE - 641 043 Phone : 37653-8

*"MAKING YOU MORE PROSPEROUS IS OUR BUSINESS"*



**தயாரிப்பாளர்: படத்தில் கோர்ட் சீன் இருக்கா?**

**கதாசிரியர்: இல்லே. ஒருவேளை படம் வெளி வந்ததும் வரலாம்!**

**— கீழை அ. கதிர்வேல்**

மடித்துக் கட்டிய வேட்டி, தலையில் முண்டாசு, கையில் பெரிய தகர டின் — இவற்றுடன் ஒரு ஆள் எதிரில் வந்து நின்று, "கை முறுக் வேணுமா சார்? சூடான கைமுறுக்!" என்றான், கட்டைக் குரலில்.

"வேணாம் போப்பா!"

"சீப்பா தரேன் சார்!"

"வாழைப்பழம்தான் சீப்புச் சீப்பாகத் தருவார்கள்... முறுக்குக் கூடவா?"

"பார்த்தாரீஜண்ட்டா இருக்கே... இப்படி அறுக்கிறியே சார்!"

"அப்படியும் நீ போக மாட்டேங்கறியே!"

"சாம்பிள் வேணா தின்னு பாரு சார்... ருசியான முறுக்!"

"ஏன்யா உசிரை வாங்கறே?"

"சாம்பிளுக்குத் துட்டு வேணாம் சார்!"

"யோவ்! நீ போக மாட்டே?"

"போறதுக்காக வரல்லே சார்..." என்ற முறுக்கு வியாபாரி டின்னை வைத்து விட்டு, பக்கத்தில் உட்கார்ந்து, "என்னடா முட்டைக் கண்ணா! முறுக்குத் தின்ன முறுக்கிக் கொள்றியே!" என்று சிரித்தான்.

"டேய்! சத்யா! என்னடா வேஷம் இது!"

"வேஷம் போடறதே வாழ்க்கையாய்ப் போச்சுடா!" — அலுத்துக் கொண்டான்.

"டின்னிலே நிஜமாகவே முறுக்குத் தானா?"

"நீயே பார்த்துக் கொள்!" என்று சத்யா திறந்து காட்டவும், அருண் டின்னுக்குள் கை விட்டான். மேலாகச் சில முறுக்குகள், அவற்றின் அடியில் —

"என்னடா இது பாக்கெட்?"

"பணம்! புத்தம் புதுக் கரென்ஸி நோட்!"

"ரியலி?"

"நூறு ரூபாய்க் கட்டு.... இரண்டு லட்சத்துக்கு!"

"ஏதுடா? கொள்ளை கிள்ளை எதுவும் அடித்தாயா?"

"கிட்டத்தட்ட அப்படித்தான்... அப்புறம் விவரம் சொல்றேன்.... கையிலே பை ஏதாவது இருக்கிறதா?"

"இல்லையே!"

"பரவாயில்லை.... பிரவுன் பேப்பரில் அழுத்தமாகச் சுற்றி, ட்வைன் போட்டுக் கட்டியிருக்கிறேன்.... எடுத்துக் கொண்டு போய் வீட்டிலே வை...."

அருண் தயங்கினான். "ஆபத்தில்லையே?"

"என்னிடம் இருந்தால்தான் ஆபத்து. அதனால்தான் உன்னிடம் ஒப்படைக்கிறேன்...."

சட்டென்று கேட்கத் தோன்றியது அருணுக்கு. "அதிருக்கட்டும் சத்யா.... உனக்கு எங்க சராகாவைப் பற்றி ஏதாவது விஷயம் தெரியுமோ?"

"உனக்குத் தெரிந்ததைவிட அதிகமாகவே தெரியும். ஒன்றுமட்டும்சொல்லவா? எயிட்ஸ் நோய்க்கு நல்ல மருந்து கண்டு பிடித்துவிட்டு அதைத் தயாரிக்காமல் உட்கார்ந்திருக்கிறார் பாணி.... சுத்தக் கல்லுப் பிள்ளையார்டா அந்த ஆள்!"

"கரெக்ட்! ஆமாம், அந்த மருந்து ஃபார்முலா இருக்கிற இடம் பற்றி...."

"அந்தவிஷயத்திலேபாணிகெட்டிக்காரத்தனமாகத்தான் நடந்து கொண்டிருக்கிறார். ஆபீஸ், பாக்டரி, பங்களா, எதிலும் வைக்கவில்லை அந்தப் பேப்பர்களை...."

அருணின் இதயத் துடிப்பு அதிகமாகியது.

"எவனாவது திருடி விடுவான் என்ற பயத்தினால் தன் தங்கை மகளிடம் கொடுத்து வைத்திருக்கிறார்...."

"இஸிட்? அந்தப் பெண்ணின் பெயர் என்ன? எங்கே இருக்கிறாள்?"

"அம்பிகா என்று பெயர். அடையாறிலே தனி பங்களாவிலே அம்மாவுடன் இருக்கிறாள்... அப்பா இல்லை.... தினமும் சாயந்தரம் அடையாறு கிளப்லே டென்னிஸ் ஆட, பழங்கால ஆஸ்டின் காரில் வருவாள்.... இன்னமும் கல்யாணம் ஆகவில்லை. போதுமா தகவல்? அதுசரி, உனக்கு எதற்காக அந்த ஃபார்முலா?"

"நீ மட்டும்தான் எனக்கு சஸ்பென்ஸ் வைக்கலாமென்று சட்டமா? நான் வைக்கிற சஸ்பென்ஸ் இது!"

"ஏதோ தப்புத் தண்டாவிலே இறங்கியிருக்கிறாய் என்று புரிகிறது.... அது உன் தலைவலி.... சரி பாக்கெட்டை வாங்கிக் கொண்டு கிளம்பு. நேரமாகிறது!"

அருண்அவனிடமிருந்து பணப் பார்சலைப் பெற்றுக் கொண்டதும், "அப்புறம் சந்திக்கிறேன்!" என்று சொல்லி மணலில் வேக வேகமாக நடந்து நிமிடத்தில் இருளில் மறைந்தே போனான் சத்யா.

சாலைக்கு அருண் வந்தபோது ஆட்டோ ரிக்ஷா ஒன்று தலைதெறிக்கும் வேகத்தில் வரவும், கைகாட்டி நிறுத்தினான். "சென்ட்ரலுக்குப் போவுது சார் வண்டி!" என்று ஆட்டோ டிரைவர் ஆரம்பிக்க, சட்டென்று ஏறி உட்கார்ந்து, "எனக்கும் அங்கேதான் போக வேண்டும்!" என்று பொய்யை உதிர்த்தான் அருண்!

(தொடரும்)

# தரத்தைப்பேணி காப்பதில் ஓர் இடைவிடா முயற்சி!




உற்பத்திச் செலவுகள் உயர்ந்து கொண்டே போகும் இன்றைய சூழ்நிலையில் தரத்தைப் பேணிக் காப்பதென்பது ஓர் இடைவிடா முயற்சியாகும். தரத்தை விட்டுக் கொடுப்பதின் மூலம் இதிலிருந்து எளிதாக மீளலாம். ஆனால் தரம் தான் TSRMல் முன்னின்று வெற்றி பெறுகிறது.

எங்கள் தயாரிப்புகளின் தரம் உறுதியாகவும் வலுவாகவும் மற்றவர்களால் ஈடு செய்ய முடியாதபடி நிற்கின்றது. ஆகவே தான் எங்களது கம்பிகள் கட்டிடக்கலை வல்லுனர்களின் எதிர்பார்ப்புகளை முற்றிலும் பூர்த்தி செய்கின்றது.

எங்களின் தரமான கம்பிகளில் ஒவ்வொரு மீட்டரிலும் உள்ள 'TSRM' முத்திரையை பார்த்து வாங்கவும்.

யுனிவர்சல் டெஸ்டிங் மெஷின்



(டென்ஷன் டெஸ்ட்)

Shree-TSRM/7/87




**திருச்சி ஸ்டீல் ரோலிங் மில்ஸ் லிமிடெட்**

திருச்சி 620004 ☎ 25301




## தரத்தில் ஒரு தன்னிகரற்ற தனிரகம்.

பதிவு அலுவலகம் மற்றும் விற்பனை அலுவலகம் : 290, மேலமாசி வீதி, மதுரை-1. Phone : 24385 Telex : 0445-205.
திருச்சி-4. Phone : 25301 Telex : 0455-204.
சென்னை அலுவலகம் : ரோசிடவர், முதல்மாடி, 7, நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-34. Phone : 475213 Telex : 041-6670.

# வரதட்சிணையை எதிர்த்து ஒரு போராட்டம்!


கதை: கவிதா

படம்: கரோ

















அன்றிரவு சேகர் வீட்டில்...
பெண் அடக்கமா, அழகா இருக்கா. என்னடா சேகர், சம்மதம்தானே?
ஓ.கே.!


மறுநாள் சேகரின் தந்தை வந்து...
ஸார், பையனுக்குப் பெண்ணைப் பிடிச்சிருக்கு... லௌகீகம் பேசலாமா? வரதட்சிணை பத்தாயிரம் ரூபாய் போதும்...


திமக்கிட்ட சிவராமன், மறுநாள் முடிவு தெரிவிப்பதாகக் கூறி அவரை அனுப்பி விட...
என்னாங்க, வந்த வரனை நழுவ விடாதீங்க!
வரதட்சிணை பத்தாயிரத்துக்கு எங்கே போவேன், ஜகதா?


படிப்பிலும் பேச்சுப் போட்டிகளிலும் வித்யா பெற்ற வெள்ளிக் கோப்பைகளை விற்றால் ஐயா-யிரம் தேறும். கட்டுரைப் போட்டிப் பரிசு ஐயாயிரமும் பாங்கில் இருக்கு...


விவரமறிந்த வித்யா...


நாலுநாள் டயம் கொடுங்க, அப்பா!


நான்காவது நாள் சேகரின் அப்பா வந்து...
ஸார்! வரதட்சிணைய வேண்டாம்! பாத்திரம் பண்டம், நகை நட்டுன்னு எதுவும் நாங்க கேட்கலை! கல்யாணத்தை உங்க இஷ்டப்படி நடத்துங்க!


இதென்ன அதிசயம்? இந்த மனமாற்றம் எப்படி நிகழ்ந்தது?
ஏன்னால்தான் அப்பா! இதை உரக்கவே படிங்க; அம்மாவும் கேட்கட்டும்!


அன்புள்ள
வித்யா,
உன் கடிதமும்
பரிசு பெற்ற உன் கட்டுரை-
யின் ஜெராக்ஸ் காப்பி
யும் கிடைத்தன.
வரதட்சிணையை
எதிர்த்து நீ பேசிய
தற்கும் எழுதியதற்-
கும் கிடைத்த
பரிசுகளே உன்
கல்யாணத்துக்கு
வரதட்சிணையாக
உருமாறவிருக்-
கும் கொடுமை
யைத்
தவிர்க்க...


...தயவுசெய்து என்னைப் பிடிக்கவில்லை என்று கூறி விடுங்கள்? என்று என்னைக் கெஞ்சிக் கேட்டிருக்கிறாய். ஆனால் உன் விருப்பம் நிறை- வேறப் போவதில்லை! என்ன செய்ய, உன் கடிதத்தையும் கட்டுரையையும் படித்த பிறகு உன்னை எனக்கு முன்னிலும் அதிகமாகப் பிடித்திருக்கி றதே! இப்படிக்கு, சேகர்.


பெற்றோரிடம் வாதாடி அவர்கள் மனதையும் மாற்றியிருக்கிறார். அதனால்தான் சேகரோட அப்பா இங்கே வந்து...
வித்யா! கடிதம் எழுதும் போட்டியில் முதல் பரிசு உனக்கில்லை, உன் கணவருக்- குத்தான்!





• மினி வேடந்தாங்கல்?

# மாவட்டத்தைச் சுற்றி...

●● திருச்சிக்குப் பின் இரண்டாவது பெரிய ஊர் கரூர்தான். பிசினஸ் மையம். பஸ் ஸ்டாண்டு குண்டும் குழியுமாய்க் கிடக்கிறது. உச்சி வெயில் மண்டையைப் பிளக்கும்படி. நிழலில் ஒண்ட இடமில்லாத பொட்டல் வெளி. மாற்று ஏற்பாடாகப் பக்கத்திலேயே புது பஸ் ஸ்டாண்டு பிரம்மாண்டமாய்க் கட்டி முடிக்கப்பட்டும், இன்னும் திறப்பு விழா நடக்கவில்லை. காரணம், நகராட்சித் தலைவர் தி.மு.க. அவர் விழாவுக்குக் கலைஞரை அழைக்க நினைக்கிறார். அதனால் தான் பிரச்னையே!

●● கரூரிலிருந்து சுற்றுப்புற ஊர்கள் எல்லாவற்றுக்கும் தீரன் சின்னமலை டவுன் பஸ்கள் போகின்றன. ஆனால் கரூர் டவுனுக்கு உள்ளே வசிப்பவர்களுக்கு டவுன் பஸ் பிராப்தம் இல்லை. நிஜம்! நகருக்குள் டவுன் பஸ் ரூட்டே இல்லை. இதனால் ஆஸ்பத்திரிக்கும் மற்ற இடங்களுக்கும் போக ஆட்டோக்களையே நம்ப வேண்டியுள்ளது. ஆட்டோக்காரர்கள் அடாவடித்தனம் பண்ணுவதில் கரூரும் விதிவிலக்கல்ல. எப்படிப் பார்த்தாலும் கஷ்டப்படுவதென்னவோ பொது ஜனம்தான். 'நகரினுள் மினி பஸ்களாவது விடலாமே' என்பது கரூரைச் சேர்ந்த டாக்டர் ராதாகிருஷ்ணனின் கருத்து.

●● இப்போது கரூருக்கும் சேலத்திற்கும் உள்ள தூரம் 96 கி.மீ. இது வேலூர் வழியாகச் செல்லும் தேசிய நெடுஞ்சாலையில் போனால்தான். அப்படியில்லாமல் கரூரையும் மோகனூரையும் இணைத்து, மோகனூருக்கருகில் காவிரியில் ஒரு பாலம் கட்டி ஒரு சாலையமைத்தால் இருபது கி.மீ. குறையும். இதனால் எத்தனை எரிபொருள் செலவு மிச்சம்! அரசு யோசிக்க வேண்டும்!

●● அரியலூர் வட்டம் திருமழபாடிக்கு அருகில் உள்ள கிராமம் கண்டராதித்தம். இது சரித்திரப் புகழ் மிக்கது. சோழ மன்னன் கண்டராதித்தன் இறை பணி புரிந்த அந்த



• கரூர் புது பஸ் ஸ்டாண்ட்

ணர்களுக்குத் தானமளித்த கண்டராதித்த சதுர்வேத மங்கலமே இன்றைய கண்டராதித்தம். அந்தச் சோழ மன்னனே கட்டி வைத்தது தான் இங்குள்ள கண்டராதித்தப் பேரேரி. ஐந்து மைல் சுற்றளவு கொண்ட இந்த ஏரியால் பயனுறுபவை சுமார் பத்தாயிரம் ஏக்கர். இன்று இந்த ஏரி எப்படியிருக்கிறது என்று பார்க்க நம்மை அழைத்திருந்தார் அவ்வூர் இளைஞர் விஸ்வநாதன். பார்த்தோம். ஏரி முழுவதும் மண்மேடிட்டுத் தூர்ந்து போய்க் கொள்ளளவே பாதியாகக் குறைந்த நிலை. போதாதற்கு ஏரி ஓரப் பகுதிகளிலெல்லாம் ஆக்ரமிப்புகள்! இவை போதாதென்று கள்ளச் சாராய ஊறல்கள் வேறு ஆங்காங்கே ஏரிக்குள் புதைக்கப்பட்ட அவலம். இந்தக் கொடுமைகளை எங்கே போய்ச் சொல்லுவது? நொந்து திரும்பினோம்.

●● புள்ளம்பாடியிலிருந்து திருமானூர் செல்லும் முக்கிய சாலையில் அரண்மனைக் குறிச்சி ஓடை குறுக்கிடுகிறது. அதில் ஒரு தரைப் பாலமும் இருக்கிறது. ஆனாலும் பெரிய பாலம் இல்லாததால் மழைக் காலத்

தில் போக்குவரத்து ஸ்தம்பிக்கும் நிலை. சில வருடங்களுக்கு முன்பு, தண்ணீர் குறை வாய்த்தானே ஓடுகிறது என்று நினைத்து ஒரு பஸ் டிரைவர் பஸ்ஸை பாலத்தில் இறக்கி விட, பஸ் வெள்ளத்தில் அடித்துச் செல்லப் பட்டு, அதிர்ஷ்டவசமாய்ப் பயணிகள் உயிர் தப்பினர். ஒரு திருமணத்துக்குப் புறப்பட்ட கோஷ்டி, தண்ணீர் பெருக்கெடுத்து ஓடிய தால் கடந்து செல்ல முடியாமல் மாப்பிள்ளை அக்கரையிலும் மணப் பெண் இக்கரையிலு மாக ஒருநாள் முழுக்கக் காத்திருக்க நேரிட்ட தாம். அதனால் முகூர்த்தமே இருபத்து நாலு மணி நேரம் தள்ளிப் போனதாம்! இக்கதை களையெல்லாம் கேள்விப்பட்ட எம்.ஜி. ஆர். நாலு ஆண்டுகளுக்குமுன் வெள்ளப்பாதிப்பை பார்வை இட இப்பகுதிக்கு வந்தபோது,


பிள்ளை மணப்பெண்ணைக் காக்க வைத்த ஓடை

இந்த அரண்மனைக் குறிச்சி ஓடையையும் பார்வையிட்டு, அந்த இடத்திலேயே உடனடி யாய்ப் பாலம் கட்ட உத்தரவு போட்டுவிட் டுப் போனாராம். அவ்வளவுதான். நான்கு வருடங்களாகியும் முதல்வர் எம்.ஜி. ஆரின் உத்தரவு இன்னமும் நிறைவேற்றப்பட வில்லை.

●● லால்குடி வட்டத்தில் கொஞ்சம் உள் வாங்கியிருக்கிற கிராமம் எதுமலை. இந்த ஊரில் கடந்த 1983—ம் வருடம் தன்னிறை வுத் திட்டத்தின் கீழ் ஒரு மகப்பேறு மருத்துவ நிலையம் கட்டப்பட்டது. அதன் நிலையை நேரில் வந்து பார்க்கச் சொல்லிக் கேட்டிருந் தார் எதுமலை நேரு இளைஞர் மன்றத் தலைவர் ரவிச்சந்திரன். மருத்துவ நிலையக் கட்டடத் தின் வெளிச் சுவரில் கரியினால் 'ரெட் லைட் ஏரியா' என்று எழுதியிருந்ததைப் பார்த்த போது, நமக்கு அதிர்ச்சி. உள்ளே பலவித மான ஆபாசக் கிறுக்கல் வாசகங்கள். கட்ட டத்தைப் பூட்டி வைக்காததால் இரவில் 'நிழலான காரியங்கள்' பல நடப்பதுண் டாம். 'இன்னுமா இதற்குத் திறப்பு விழா நடத்தவில்லை?' என்றோம். அந்த இளைஞரோ மௌனமாக எங்களை வேறு ஓர் இடத்துக்கு அழைத்துப் போனார். அது ஊர்ப் பஞ்சா யத்து ஆபீஸ். கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனால் ஒரு சலவைக் கல். அதில் நாங்கள் சற்றுமுன் பார்த்த மகப்பேறு மருத்துவ நிலையம் 22.12.83—ல் எம்.ஜி. ஆர். நாவலர், ம.பொ.சி. முதலியவர்கள் கலந்து கொண்டு ஜாம்ஜாம் என்று திறப்பு விழா நடத்தியதாகக் குறிப்பிடப்பட்டிருந் தது! இது எப்படி இருக்கு?

●● காவிரிக் கரையிலேயே அமைந்துள்ள ஆனால் குடிதண்ணீருக்குத் தவிக்கும் ஊரைப் பற்றித் தெரியுமா உங்களுக்கு? பார்க்க ஆசை யானால் திருச்சியிலிருந்து டவுன் பஸ் பிடித்து, கரூர் ரூட்டில் உள்ள கம்பரசம் பேட்டைக்கு வாருங்கள். நான்கு வருஷங்களுக்கு முன்பு வரை இங்கே தண்ணீருக்குப் பிரச்னை இல்லை. அப்புறம் திருச்சி நகரின் குடி தண்ணீர்த் தேவையை பூர்த்தி செய்ய கம்பரசம்பேட்


• கம்பரசம்பேட்டை மக்கள்

டைக்கு அருகிலுள்ள காவிரியாற்றில் பெரிய ஆழ்கிணறு ஒன்று தோண்டி, ராட்சச மோட்டார் போட்டுத் தண்ணீரை உறிஞ்ச ஆரம்பித்தார்கள். அவ்வளவுதான், கம்ப ரசம் பேட்டைக்குக் கஷ்ட காலம் ஆரம்பித் தது. கம்பரசம்பேட்டைப் பகுதியிலுள்ள நிலத்தடி நீர் உறிஞ்சப்படுவதால், கம்பரசம் பேட்டைக் கிணறுகளெல்லாம் கோவிந்தா! அதனால் வருடத்தில் ஏழெட்டு மாதங்களுக் குத் தண்ணீருக்கு அலையும் நிலைதான் அவர் களுக்கு. அதனால் இங்கிருந்து தண்ணீர் எடுத் துப் போகாதீர்கள் என்று கம்பரசம் பேட்டை வாசிகள் கூறவில்லை! திருச்சிக்குப் போகும் குடிதண்ணீரில் அல்லது இனி சூரியூ ருக்குக் கொண்டு செல்லப்படவிருக்கும் குடி நீரில், எங்களுக்கும் ஓர் இரண்டு குழாய்கள் போட்டுக் கொடுங்கள்! என்றுதான் கேட் கிறார்கள், கம்பரசம்பேட்டை புவனேஸ்வரி மாதர்-சங்கத்தினர். நியாயமான வேண்டு கோள். நிறைவேற்றப்படுமா என்பதுதான் கேள்வி!

●● 1882—லிருந்து 1987 வரை எத்தனை வருஷம்? 105 வருஷம். நூற்றாண்டு விழா எப்போது கொண்டாடுவார்கள்? 100 வருஷ மானதும். ஆனால் மேற்கொண்டு ஐந்து வருஷமாகியும் லால்குடி அரசினர் மேல் நிலைப் பள்ளிக்கு நூற்றாண்டு விழா கொண் டாட முடியாத நிலை. என்ன காரணம்? நூற் றாண்டு விழாக் கமிட்டித் தலைவர் ராஜா

சிதம்பரத்தைச் சந்தித்துக் கேட்டோம்.

"நூற்றாண்டு விழாவுக்கு எந்த அரசியல் தலைவரைக் கூப்பிடுவது என்பதில் கமிட்டி உறுப்பினர்களுக்குள்ளும் சரி, பள்ளிக்கூட ஆசிரியர்களுக்குள்ளும் சரி பலமான கருத்து வேறுபாடு. நூற்றாண்டு விழாவுக்கு அரசியல்வாதிகளே வேண்டாம்; கல்வியாளர்களாய் அழைக்கலாம் என்பது என் கட்சி. இதெல்லாம் சேர்ந்து, பள்ளிக்கூட நூற்றாண்டு விழாவை நடத்த முடியாமல் செய்துவிட்டன. இதுதான் உண்மையான காரணமே



* தர்மலிங்கம்



* டாக்டர் ராதாகிருஷ்ணன்

தவிர வேறில்லை!" என்றார் அவர். பள்ளிக்கூட விழாக்களிலுமா அரசியல்? அசிங்கமாக இல்லை?

●● அரசாங்கத்திலிருந்து பஞ்சாயத்துக்கு ஒரு பொது டெலிவிஷன் என்று பல ஊர்களிலும் கொடுக்கப்பட்டிருப்பது தெரிந்ததே! அந்த டெலிவிஷன் பெட்டிகள் எப்படி இருக்கின்றன என்று தெரிந்து கொள்ளலாமா? வாருங்கள் லால்குடிக்குப் பக்கத்தில் இருக்கும் மணக்கால் காமராசபுரத்துக்குப் போகலாம்.

"எங்க ஊர் டெலிவிஷன் பெட்டி ஒரு வருஷமாய் ரிப்பேர். சுவிட்சைப் போட்டால் படம் வராது. வெறும் சவுண்டுதான் வரும். யூனியன்லே எவ்வளவோ சொல்லியாச்சு. ரெண்டு மாசத்துக்கு முன்னாலே ஒரு இஞ்சினியர் வந்து பார்த்துட்டுப்போனாரு. என்னவோ ரிப்பேருன்னாரு. எனக்கு அது சரியாப் புரியலே. ஆபீஸ்ல சொல்றேன்னுட்டுப் போனவருதான். அதுக்கப்புறம் ஒரு தகவலும் இல்லீங்க. இந்த ஊர் ஜனங்க சில பேர் நான் அதைச் சரி செஞ்சு வீட்ல வெச்சு, சினிமாவெல்லாம் பார்க்கறேன்னு பேசிக்கறாங்க. நீங்களே வந்து பாருங்க சார்" என்று வீட்டினுள் அழைத்துப் போனார் அந்த ஊர்ப் பஞ்சாயத்துத் தலைவர் தர்மலிங்கம்.

பார்த்தோம்! மேஜை மீது செத்துப் போன டெலிவிஷன் உட்கார்ந்து கொண்டிருந்தது. "இந்த டெலிவிஷனை விடுங்க



* ரர்ஜா சிதம்பரம்



* விஸ்வநாதன்

சார்! இது இல்லாட்டி ஒண்ணும் குடிமுழுகிப் போயிடலே! எங்க ஊருக்கு இன்னும் தண்ணி வசதி போதாது. தெரு விளக்கு எரியாது. மூணு ஃபேஸ் கரெண்டு வராது. சத்துணவு மையத்துக்கு நல்ல கட்டடம் கிடையாது. இதுக்கெல்லாம் வழி செய்தால் புண்ணியமாய்ப் போகும்" என்றார் அவர்.

●● "வேடந்தாங்கல் மாதிரி இங்கேயும் ஒரு பறவைகள் சரணாலயம் அமைக்க வாய்ப்பு இருக்கிறது!" என்று திருச்சி வன உயிர்ப் பாதுகாப்புச் சங்கத்தின் உறுப்பினரான வேலாயுதம் சொன்னபோது ஆச்சரியமாய் இருந்தது. போகிற வழியையும் சொன்னார். திருச்சி—தஞ்சை பாதையில் கிழப்பாலூர் அருகேயுள்ள வேட்டுக்குடி கரைவெட்டி ஏரி. சாலையில் காரை நிறுத்திவிட்டு, பலவிதப் பறவைகளையும் காணும் ஆர்வத்தில் பைனாகுலர் சகிதம் ஏரிக் கரையை அடைந்தோம். தூரத்தில் நூற்றுக்கணக்கான பறவைகள் கூட்டமாய் உட்கார்ந்து கொண்டிருந்தன. நிறையப் பறவைகள் அங்கே இருந்தும் அவற்றுக்குக் கூடு கட்டவோ, நிழல் தரவோ மரங்கள் இல்லை. அயல்நாட்டுப் பறவைகள் கூட வருவதாய் வேலாயுதம் சொன்னார். ஆனால் நிலைமை இப்படி இருந்தால் உள்ளூர்ப் பறவைகளே இடத்தைக் காலி பண்ணிக் கொண்டு கிளம்பிவிடும். அரசாங்கம் முயற்சி செய்தால் இங்கு ஒரு மினி வேடந்தாங்கல் உருவாக்கலாம். மனமிருந்தால் மார்க்கமுண்டு.

●● அனாதை இல்லங்கள். பொதுச் சேவை நிறுவனங்கள் இவை எல்லாம் தம் பணிகளுக்கென நல்ல மனம் படைத்தவர்களின் நிதி உதவியை நாடுவதுண்டு. ஆனால் பொது மக்கள் அனுப்பும் நன்கொடையைத் திருப்பி அனுப்பும் அமைப்பு பற்றித் தெரியுமா உங்களுக்கு? உண்மை! "எங்கள் இல்லத்தின் சுய தேவை பூர்த்தியாகிவிட்டது. அத்துடன் நாங்கள் வெளியில் சென்று நன்கொடை வசூலிப்பதையும் நிறுத்திக் கொண்டுவிட்டோம். ஆனாலும் கடந்த சில ஆண்டுகளாய்த் தாமாக வரும் நன்கொடைகளை மட்டும் பெற்றுக் கொண்டிருந்தோம். இப்போது அவற்றையும் ஏற்பதில்லை என்று தீர்மானித்

*Boost is the secret of my energy!*

"பதினைந்து அல்லது இருபது ஓவர்கள் பந்து வீச்சு அல்லது செமத்தியாக அடிக்கும் பேட்டிங், களத்தில் எப்போதும் ஓட்ட சாட்டம், எமது உத்திகளைக் கையாளுதல், இப்படித்தான் என்னுடைய கிரிக்கெட்டை நான் ரசித்து விரும்புகிறேன்.

இதற்கு உடல் தகுதியான நிலையில் இருப்பதும், ஏராளமான சக்தியும் தேவை. அதனால்தான் நான் ஆண்டு முழுவதும் கடினமாகப் பயிற்சி செய்கிறேன். அதனால்தான் நான் பூஸ்ட் குடிக்கிறேன் நாள் தோறும்."



கபில்தேவ் பூஸ்ட் பருகுவதற்குக் காரணம், அது அவருக்குத் தேவையான சக்தியையும் அவர் விரும்பும் சுவையையும் அளிக்கிறது. பூஸ்டில் கிரீம் நிறைந்த பால் மற்றும் ஆரோக்கியமான மால்ட்டின் குண நலன்களுடன் கோக்கோவும் கலந்துள்ளது.

கபிலைக் கேளுங்கள், அது அவரது ரகசியம்.




# பூஸ்ட்

## இன்சுவைமிக்க சக்தி

HTA 5079 TAM

திருக்கிறோம். எனவே, 'தாங்கள் அனுப்பிய நன்கொடையைத் திருப்பி அனுப்புகிறோம். நீங்களே, தேவையுள்ள வேறு ஏழை எளிய மக்களுக்கு, சேவை நிறுவனங்களுக்கு இத் தொகையை அனுப்பி வையுங்கள்!' என்ற பதிலுடன் நன்கொடைகளைத் திருப்பி அனுப்பும் காரியத்தைச் செய்து கொண்டிருக்கிறோம்...'' என்கிறார் திருச்சி மாவட்டம் திருப்பராய்த் துறையிலுள்ள ராமகிருஷ்ணக் குடில் ஊழியரான சதாசிவம்.

சுமார் முந்நூறு அனாதைச் சிறுவர்களுக்கு இருக்க இடம், கல்வி, மற்ற வசதிகளைத் தந்து வரும் வெள்ளி விழா கண்ட, இக்குடிலை நடத்தி வருபவர் பிரம்மச்சாரி ராமசாமி. இந்தக் குடிலின் பள்ளியில் எஸ்.எஸ்.எல்.சி. முடித்த மாணவர்களுக்கு வேலை தருவதற்கென்றே ஒரு தொழிற் சேவை நிலையமும் நடத்தி வருவது குடிலின் இன்னொரு சிறப்பு அம்சம். இன்னும் எத்தனை தகுதியுள்ள அனாதைச் சிறுவர்கள் வந்தாலும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளத் தயாரென்றும் நிதி ஒரு பிரச்னையே இல்லை என்றும் மறுபடியும் அடித்துச் சொல்கிறார்கள் குடிலைச் சேர்ந்தவர்கள்! ஆச்சரியமான விஷயமல்லவா இது!

●● ''பாங்க் மானேஜர் கொலை செய்யப்பட்ட பிறகு திருச்சி மாவட்ட உட்கோட்டையிலுள்ள இந்தியன் ஓவர்சீஸ் பாங்கின் கிளை மூடப்பட்டு விட்டது. அதனால் டெபாஸிட்காரர்களும், மற்ற வாடிக்கையாளர்களும் தங்கள் கணக்குகளை 'ஆபரேட்' செய்ய இயலவில்லை!'' என்று எங்களுக்கு ஒரு கடிதம். அதுபற்றி ஐ.ஓ.பி. மத்திய அலுவலகத்தில் (சென்னை) விசாரித்தபோது கிடைத்த தகவல்: உட்கோட்டையில் நடந்த கொலை காரணமாக சென்டிமென்டலாய் அங்கு ஊழியர்கள் பணியாற்ற விரும்பவில்லை. எனவே அந்தக் கிளை மூடப்பட்டுவிட்டது. அங்கே இயங்கி வந்த அனைத்து அக்கௌண்டுகளையும் அருகில் உள்ள ஜயங்கொண்டத்தில் ஒரு புதுக் கிளை திறந்து அதற்கு மாற்றி விடலாம் எனத் தமிழக அரசுக்குப் பரிந்துரை செய்தது ஐ.ஓ.பி. நிர்வாகம். அரசிடமிருந்து அனுமதி கிடைத்த பிறகு, ரிசர்வ் வங்கியின் அனுமதி கோரப்பட்டது. ஆனால் ஜயங்கொண்டத்தில் ஏற்கெனவே வேறு இரண்டு மூன்று கமர்ஷியல் பாங்க் கிளைகள் இருப்பதால், புதுக் கிளை திறந்தால் பிசினஸ் இருக்காது என்கிற அடிப்படையில் ரிசர்வ் பாங்க் அனுமதி தரவில்லை. அதனால் கிளை திறக்க முடியாது போய்விட்டது. இப்போது உட்கோட்டைக்கு அருகே வேறு ஏதாவது ஊரில் கிளை திறக்கலாம் என்று ரிசர்வ் வங்கி கூறிய ஆலோசனையின்படி, ஐ.ஓ.பி. திருச்சி மண்டல அலுவலகத்தைத் தக்க இடத்தைச் சிபாரிசு செய்யக் கேட்டுக் கொண்டுள்ளது. பிரச்னை தீர இன்னும் சில மாதங்கள் ஆகும்!

— மெளஷ்மி

# அடுத்த இதழ்

**திருச்சி மாவட்டத்தில் கல்கி — II**

**எப்போது ஓயும் நாமச் சண்டை?**
— ஸ்பெஷல் ரிப்போர்ட்

**திருச்சி — ஸ்ரீரங்கம்**
— ஒரு ரவுண்ட்-அப்



**நம்மைச் சந்திக்க மறுத்த திருச்சி கலெக்டர்**
— அனுபவக் கட்டுரை





# அமரர் கல்கி

# நினைவுச் சிறுகதைப் போட்டி – 1987

| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ | 1500 |
| இரண்டாவது பரிசு | ரூ | 750 |
| மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ 375 வீதம்) | ரூ | 750 |

ஆக மொத்தம் ரூ 3000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் வேறு எந்த உருவிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும்வரை எழுத மாட்டேன் எனவும் உறுதி மொழி தர வேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15**

- உறையின் மேல் அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால் தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 2 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி, சென்னை-600 034.



சீதா: மூக்கும் முழியுமா நல்லாவே இருக்கேன் இல்ல?

பாண்டியன்: பதில் சொல்ல மாட்டேன். நான் தான் வெடைச்ச சேவலாச்சே! இப்படியேதான் இருப்பேன்.

# ஒரே ரத்தம்

ஜாதிக் கொடுமை, தீண்டாமை இவற்றையெல்லாம் அடியோடு ஒழித்துக் கட்டிவிட்டோம் என்று மார் தட்டிக் கொள்ள முடியாது. ஒத்துக் கொள்கிறோம். அதற்காக நீளமான மூங்கில் பிளாச்சில் டீக்கடைக்காரர் செத்த பல்லி சகிதம் டீ ஊற்றுவதும் அதை அப்பாவி ஹரிஜன ஆசாமி கை ஏந்திக் குடிப்பதும் எந்த ஊரில் நடக்கிறது ஐயா?

தீண்டாமையை எதிர்த்து ஒரு படம் (முழுக்க, முழுக்க). கதை வசனம் கலைஞர். அரசியல் பக்கம் போகவே கூடாது என்று, கதை எழுதத் தொடங்கியபோதே கங்கணம் கட்டிக் கொண்ட மாதிரி தெரிகிறது. அரசியல் வாடை வீசுகிறது என்றால் அது செயற்கையாக நடிக்கும் இன்ஸ்பெக்டர், எம்.எல்.ஏ. ஸீனில்தான்!

முதல்முறையாக மு.க. ஸ்டாலின் அறிமுகமாகிறார். மேடையில் பேசுகிறார். தீண்டாமையை ஒழிக்கப் பாடுபடுகிறார். அவரே (படத்தில்) ஒழித்துக் கட்டப்படுகிறார்.

கார்த்திக்: டைரக்டர் ஸார், மூவ்மெண்ட் கொடுக்கத் தெரியாதவங்களையெல்லாம் என்கூட ஏன் ஸார் ஜோடி சேர்க்கறீங்க?

மாதுரி: இவர் மூவ்மெண்ட் கொடுக்கிற லட்சணத்துக்கு, நானே போதும்னு சொல்லுங்க டைரக்டர் ஸார்...



எல்லாமே மேலோட்டம். நடித்தவரும் சரி, நடிக்க வைத்தவரும் சரி, இன்னும் கொஞ்சம் சிரத்தை காட்டியிருக்கலாம்.

சாஸ்திர சம்பிரதாயங்களில் ஊறிய ஒரு பழைய பஞ்சாங்கத்தின் (பண்ணையாராகக் கிஷ்மு — ஓ.கே.; குரல்தான் நாட் ஓ.கே.) வாரிசுகள் கலப்பு மணம் செய்து கொள்கின்றன என்பதுதான் கதை. கிஷ்முவின் வாரிசுகளாக கார்த்திக் — சீதா.

படிப்பறியாத மாதுரி லவ் லெட்டர் எழுதுவதற்காகத் தோழியை அணுகுவதும் சேற்று மிதி தோழிக்காரி கன்னுபின்னு என்று கடிதம் எழுதுவதும் பின்னர் அது வேறு மாதிரி வெடிப்பதும் கடைசியில் காதலாய்க் கனிவதும் பரவாயில்லே.

ராதாரவி கொடுத்த வேலையைக் கச்சிதமாகச் செய்திருக்கிறார். மாதுரி சீதா எல்லாம் தொட்டுக் கொள்ளப்படும் ஊறுகாய்கள்.

பாடல் காட்சிகளிலும் சரி, கதை சொல்கிற நேர்த்தியிலும் சரி, பழமை வாடை



மு. க. ஸ்டாலின்: உம்மேல சத்தியமாச் சொல்றேன். அடுத்த படம்னு ஒண்ணு செஞ்சா, நடிப்புன்னு என்னன்னு நல்லாக் கத்துக்கிட்டு, சின்ஸியராச் செய்யறேன், போதுமா!

கொஞ்சம் அதிகம்தான். டைரக்டர் யாரென்று பார்த்தால் சொர்ணம். நீண்ட நாளாகத் தூக்கம் போட்டுவிட்டுத் திடீரென்று எழுந்து செட்டுக்கு வந்துவிட்டாற் போலிருக்கிறது.

'பாண்டியன் எப்போதுமே விடைத்த சேவல்தான். அட்டேன்ஷனில் தான் கையை வைத்துக் கொண்டு நிற்பார். படபடவென்றுதான் பேசுவார். சுபாவம். சொல்லிக் காட்டினால் மட்டும் மாற்றிக் கொள்ளவா போகிறார்?

ஒரு பக்கம் பண்ணையார் கிஷ்மு புயல் போலச் சீற, எதிரே கார்த்திக் தென்றல் மலர் போல வருடி வருடிப் பதில் அளிக்க — அந்த ஸீனை மட்டும் மெச்சிக் கொள்ளலாம்.

பண்ணையார் கிஷ்மு கடைசியில் சாகாமல், திருந்திவிட்டார் என்று மட்டும் முடித்திருந்தால் முழுக்க முழுக்க வயலும் வாழ்வும், வாழ்க்கைக் கல்வி ஆகியவற்றில் ஒளி பரப்பாகும் பிரசார நாடகம்தான்.

— ஜெயமன்மதன்

* எஸ். முருகவேல், இட்டச்சேரி.

? எம். ஜி. ஆரின் தற்போதைய பத்திரிகை விளம்பரத்தைக் கவனித்தீரா? தமது பெயரைச் சினிமாக்காரர்கள் பயன்படுத்த வேண்டாமென்று வெளிவந்ததைத்தான் சொல்கிறேன்!

! கவனித்தேன். எம். ஜி. ஆர். பெயரில் வெளிவந்த விளம்பரங்களிலேயே மிகவும் பாராட்டத்தக்கவிளம்பரம் இது ஒன்றுதான். அதுவும் எம். ஜி. ஆர். படமில்லாமல் வெளிவந்தது மேலும் பாராட்டுக்குரியது. மனம் திறந்து பாராட்டுகிறேன்.

* க. இளங்கோ, நந்தியநல்லூர்.

? 'கருணாநிதி மலை; நான் உளி' என்கிறாரே காளிமுத்து?

! சிற்றுளியால் கல்லும் தகரும்' என்ற பழமொழியை நினைவில் கொண்டுதான் இப்படிப் பேசியிருக்கிறார் காளிமுத்து. ஆனால்

# அரசியல் சினிமாக்கள் தடைச்சட்டம் பற்றி?



* மலை.....

* ......உளி

உளியைக் கொண்டு மலையில் சாசனங்கள் தான் எழுத முடியுமே தவிர, தகர்க்க முடியாது!

* சீர்காழி சாமா, சீர்காழி.

? சமையல் செய்வது, சாப்பிடுவது எது சிரமமான காரியம்?

! இரண்டுமே இல்லை. சமையலுக்கான தண்ணீரைப் பிடித்து வந்து கொடுப்பதுதான் பெண்டு நிமிர்த்துகிற சங்கதி ஸ்வாமி!

* பி. வி. ஜெயஸ்ரீ, கோவை — 2.

? 'அன்று நாம்தான் உயர்ந்தவர்கள் என்ற செருக்கோடு நமது முன்னோர்கள் வாழ்ந்தார்கள். அவர்கள் அன்று மற்றவர்களை ஒதுக்கியும் வைத்தார்கள். அவர்கள் செய்த பாவத்திற்கு இன்று நாம் எல்லாவற்றிலும் ஒதுக்கப்படுகிறோம்' என்று இன்றைய பிராமணர்கள் பலர் ஆதங்கத்தோடு கூறுகிறார்களே. இதில் தங்கள் கருத்து என்ன?

! உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்ற செருக்கை இன்று விட்டு விட்டவர்கள் இப்படி ஆதங்கப்படுவதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் பிற்படுத்தப்பட்ட சமுதாயத்துக்கு இட ஒதுக்கீடு என்பது முன்னேறிய வகுப்பினரைப் பழி வாங்கும் எண்ணத்தில் கொண்டுவரப்படவில்லை. பிற்படுத்தப்பட்டவருக்கு நியாயம் கிடைக்க வேண்டும் என்பதற்காகவே ஏற்பட்டது. ஆனால் இந்த இட ஒதுக்கீடு நீடித்துக் கொண்டே போனால் சகோதரத்துவம்சமத்துவம்என்பவை அர்த்தமற்றவையாகிவிடும் என்பதும் உண்மை. அதனால்தான் காந்திஜி இட ஒதுக்கீடுக்கு ஒரு கால வரம்பு வைத்தார். ஆனால் நமது அரசியல் தலைவர்கள் அந்தக் காலவரம்பைக் காலவரம்பின்றி நீடித்துக் கொண்டே போகிறார்கள். காரணம் வோட்டுக்களும் பதவி நாற்காலியுமே இவர்களின் லட்சியமாக இருக்கிறதே தவிர, தாழ்த்தப்பட்டவரை உயர்த்தி, அவர்களுக்குத் தன்னம்பிக்கையை உருவாக்குவதில் கருத்துச் செலுத்தவில்லை. மாறாக பிற்படுத்தப்பட்டவனாக இருப்பதே லாபகரமானது என்ற சூழலை ஆட்சியிலுள்ளவர்கள் ஏற்படுத்தி விட்டார்கள். இந்த இழிநிலைக்காகவா அம்பேத்காரும் காந்திஜியும் வாதாடிப் போராடினார்கள்? இல்லவே இல்லை!

* ரா. க., ஈரோடு.

? தேவிப்பட்டினத்தில் கலப்புத் திருமணம் செய்து கொண்ட தம்பதி, தங்களுடைய குழந்தை எந்த ஜாதியைச் சேர்ந்தது என்று நீதிமன்றத்தில் கேட்கின்றனர். தாங்கள் நீதி வழங்கினால் எப்படி வழங்குவீர்?

! கலப்புத் திருமணம் என்பதே, ஜாதி வேற்றுமை — என்ற அசிங்கத்தை நீக்கிச் சுத்தப்படுத்துவதற்காகத்தான். இந்நிலையில், பிறக்கும் குழந்தை ஜாதியைக் கடந்த மனிதனாக வளருவதே முறை. ஆனால், குழந்தையைப் பள்ளிக்கு அனுப்பும்போது, என்ன ஜாதி என்று கேட்கிறார்களே, என்ன செய்வது? இந்நிலையில், கலப்புத் திருமணத் தம்பதிகளுக்கு அரசு தங்கப் பதக்கம் கொடுப்பது ரொம்ப ரொம்ப அபத்தமானது; முரண்

பாடானது. அரசியல் ஆதாயங்களுக்காக அரசாங்கம் ஜாதிக் கொடுமையை ஒழிக்க முன்வரா விட்டாலும், குறைந்தபட்சம் கலப்புத் திருமணத் தம்பதியினருக்குப் பிறந்த குழந்தைகளிடமாவது அரசு ஜாதியைக் கேட்காமலிருக்க வேண்டும் என்பதே எனது கருத்து.

* **எஸ். அரிஅரன், திருநெல்லிக்காவல்.**

? **நம் நாட்டை வெள்ளைக்காரர்கள் ஆட்சி செய்ததற்கும் தற்போது நம் அரசியல்வாதிகள் ஆட்சி செய்வதற்கும் என்ன வித்தியாசம்?**

! அடிமை இந்தியாவில் மக்களுக்கு இருந்த உரிமைகள் கூட இந்தச் சுதந்திர பாரதத்தில் பறிபோகின்றன. மேலும் அன்று நாணயம் இருந்தது; இன்று இல்லை. அன்று நாநயமும் இருந்தது; இன்று இல்லை. அன்று ரூபாய்க்கு மதிப்பு இருந்தது; இன்று இல்லை.

* **சங்கர், சிங்காரப்பேட்டை.** *

? **தமிழகம் முழுவதும் கடுமையான குடிநீர்ப் பஞ்சம், வறட்சி, உற்பத்திப் பாதிப்பு — இந்த நெருக்கடிகளைக் கவனத்தில் கொண்டு, மாநில அரசு தனது அரசாங்க விழாக்களை நிறுத்திக் கொண்டால் என்ன?**



* புதிய விளம்பரம்!

* நிறுத்தவா டி. வி.?

! ஐயய்யோ, கதையையே கெடுக்கப் பார்க்கிறீர்களே! ஒரு பக்கெட் தண்ணீருக்கு நாலு ரூபாய் செலவழித்து மகாநதியிலிருந்து கப்பலில் தண்ணீர் கொண்டுவரப் போகிறார்கள்! முன்பு சென்னை நேரு ஸ்டேடியத்தில் நடந்த கிருஷ்ணா நதிநீர்த் திட்டத் துவக்க விழா மாதிரி, இப்போது கப்பல் கப்பலாக மகாநதியிலிருந்து தண்ணீர் கொண்டு வரும் திட்டத் துவக்க விழாவைக் கொண்டாட வேண்டாமா! தமிழனின் காதுகள் சரியான யானைக் காதுகள். அதனால்தான் எத்தனை முழத்திற்குப் பூச்சுற்றினாலும் தாங்குகிறது.

* **கே. என். ஸ்ரீனிவாஸ், கொரட்டூர்.**

? **'டி. வி. படம் போரடித்தால் டி. வி. யை நிறுத்தி விடுங்கள்' என்று ராஜீவ் சொல்லுகிறாரே?**

! டி. வி., யை நிறுத்தி விடவா மக்களின் வரிப்பணத்தைக் கோடி கோடியாகச் செலவழிக்கிறார்கள்? 'டி. வி. யை நாங்கள் மூடும் முன், டி. வி. ஸ்டேஷன்களை நீங்கள் மூட வேண்டியிருக்கும்' என்றுதான் பதில் சொல்லத் தோன்றுகிறது.

* **ஆர். அப்துல் சலாம், திருச்சி — 20.**

? **'அகில உலக இனிச்சவாயர்கள் சங்கம்' என்று சேலத்தில் ஒரு சங்கம் துவக்கப்பட்டுள்ளதாமே?**

! நம் நாட்டு வாக்காளர் பட்டியலுக்கும் இனிச்சவாயர் சங்க உறுப்பினர் பட்டியலுக்கும் அதிக வித்தியாசம் இருக்குமென்று தோன்றவில்லை.

* **மு. பாஸ்கரன், புதுவை — 5.**

? **எம். எல். ஏக்களுக்கு இரண்டு மடங்கு தினப்படி உயர்வு தேவைதானா?**

! இந்தநாட்டில்எந்தத்தொழிலாளிக்கும்எந்த அதிகாரிக்கும் சம்பளமோ, படியோ திடுதிப்பென்று இருமடங்கு ஆவது என்பது கனவிலும் நடக்காது. ஆனால் நமது எம்.எல்.ஏக்கள், கவர்னர்கள் ஆகியோருக்கு நடக்கிறது! இது இந்தியாவின் ஸ்பெஷல் ஜனநாயகம்! நிற்க. தினப்படிதான் உயர்ந்து விட்டதே என்பதால் எம். எல். ஏக்கள் தங்கள் வைட் பிளினை நிறுத்தி விடவா போகிறார்கள்?

* **பி. தனபால், காரைக்கால்.**

? **பிறக்கப் போகும் குழந்தை ஆணா, பெண்ணா என்று தெரிந்து கொண்டு, பெண்ணாக இருந்தால் கருவைக் கலைத்து விடுபவர்களைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

! என்னதான் சட்டபூர்வமானதாக்கப்பட்டாலும் கூட கருக்கலைப்பு என்பது கொலைக்குச் சமம்தான். அதிலும் பெண் என்றதும்கலைப்பதுமனிதகுலநாகரிகத்திற்கே விரோதமானது. மன்னிக்கவே முடியாதது.

* **பி. எஸ். பொன்ராஜ், நாகர்கோயில்.**

? **எம். எல். ஏக்களைக் கிண்டல் செய்து வரும் சினிமாக்களைத் தடை செய்து சட்டம் இயற்றியுள்ளார்களே?**

! இந்தியக் குடிமக்களுக்கு நமது அரசியல் சாசனம்வழங்கியிருக்கும் கருத்துச் சுதந்திரம், எழுத்துரிமை, பேச்சுரிமை, விஷயங்களைப் பரிமாறிக் கொள்ளும் உரிமை ஆகிய அடிப்படை உரிமைகளுக்கெல்லாம் ஒரு சவால் எழுந்துள்ள நேரம் இது. இந்த உரிமைகளை நீதிமன்றம் மக்களுக்குக் காப்பாற்றித் தரும் என்று நம்புகிறோம்.

* **ரூ. 15 பரிசு பெறுபவர்:**

**சங்கர்,**
**8/122, பஸ் நிலையம்,**
**சிங்காரப்பேட்டை**
**— 635 307.**

# வெயிலை விடவும் வெப்பம்!

## வட்டமேஜை

• அப்பா... வெயிலைவிட, உங்கள் தலையங்கத்தில் தான் எவ்வளவு வெப்பம்...?! அனல் பறக்காத குறை தான். நகைச்சுவை ததும்ப, அருமையாய் இருந்தது. அதிலும் கடைசி வரி — சூப்பர்ப்.

மதுரை — 20, எஸ். ஜே. இதயா.

• கல்கி தலையங்கத்தை இரண்டு ஜெராக்ஸ் காப்பி எடுத்து, ஒன்றை தமிழக முதல்வருக்கும், மற்றொன்றைத் 'தமிழகத்தில் வறட்சி நிவாரணப் பணிகள் சிறப்பாக நடக்கிறது' என்று அண்மையில் பாராட்டுரை வழங்கிய மத்திய அமைச்சர் ப. சிதம்பரத்திற்கும் அனுப்பி வைத்தேன்!

திருமுதுகுன்றம், வி. செ. தமிழ்நேசன்.

• 'நிதி நிர்வாகமும் தெரியவில்லை; நீர் நிர்வாகமும் தெரியவில்லை!' தலையங்கம் படித்த ஞாபகத்துடனேயே தூங்கினேன். இரட்டை அதிர்ஷ்டம் பாருங்கள்! எம். ஜி. ஆரும், ஜெயலலிதாவும் டூயட் பாடினார்கள், ஜிகினுக்கள் பளபளக்கும் உடைகளணிந்து கொண்டு— என் கனவில்!

திருத்துறைப்பூண்டி, டி. டேவிட்ஜான் பிரிட்டோ.

• 'நிதி நிர்வாகமும் தெரியவில்லை. நீர் நிர்வாகமும் தெரியவில்லை.' தலையங்கத்தில் தண்ணீர்ப் பற்றாக் குறை பற்றி எழுதியிருக்கிறீர்கள். நியாயம்! ஆனால், கட்டுரையின் முடிவில் 'யார் கண்டது, உங்களுக்கு அதிர்ஷ்டமிருந்தால் அவற்றின் இடையே எம். ஜி. ஆரும், ஜெயலலிதாவும் டூயட் பாடி ஆடக் கூடச் செய்யலாம்' என்று கிண்டல் செய்துள்ளீர்கள். என்ன தான் தவறு செய்திருந்தாலும் ஒரு மாநிலத்தின் முதல்வரைப் பற்றி இப்படி எழுதக் கூடாது.

சென்னை — 17, 'லயன்' எம். எஸ். கோபு.

• 'காப்பாற்றுங்கள் பொம்மலாட்டக் கலையை' — பயனுள்ள பேட்டிக் கட்டுரை. உண்மைச் சம்பவங்களைக் கூட பொம்மலாட்டம் மூலம், மக்களுக்கு விளக்கிக் காட்டும் இவ்வரிய கலைக்குப் புத்துயிர் தந்து, மக்கள் மட்டும் அல்ல அரசாங்கமும் பேராதரவு கொடுக்க வேண்டும் என்பதே எனது மேலான கருத்து.

சாத்தூர், எம். செல்லையா.

• பொம்மலாட்ட நிகழ்ச்சி மூலம், மக்களின் தரத்தையும் நிலையையும் உயர்த்தி வரும் கலைஞர் அருண் குமாரின் சேவையை மறக்க முடியாது. வெல்க அவர் தம் தொண்டு!

சென்னை — 19, ஆர். வி. சுப்பிரமணியன்.

• ம்கரிஷியின் 'விருந்துக்கு வந்தவள்' சிறுகதை அருமை. தெளிந்த நீரோடையாகச் சொல்ல வந்த வற்றைக் கவையாகக் கூறியிருக்கிறார். சுபமாக முடித்திருக்கிறார். என் மனமெனும் இருக்கையில் இச்சிறு கதை அமர்ந்து கொண்டு விட்டது.

திருச்சி — 3, ராஜேந்தர்பிரியன்.

• 'பட்டிக்காடு' சிறுகதை கிராமியப் பெருமையைப் பறை சாற்றுவதாக அமைந்திருந்தது.

காரைக்குடி, கலைப்பிரியன்.

• 'பெண்களுக்கு எதிரான குற்றங்கள் — விடிவு காலம் எப்போது?' என்ற கட்டுரையைப் படித்த போது, ஒரு பேராசிரியரே இப்படி நடந்து கொள்ளுகிறாரே என்று நாணித் தலைகுனிந்தேன். மேலும், 1986 இல் பதிவாகியுள்ள பெண்களுக்கெதிரான குற்றங்களின் அட்டவணையைப் படித்த போது, அதிர்ச்சிக்குள்ளானேன்.

வேதாரண்யம், க. ம. வீரபாண்டியன்.

• சமீபத்தில் உங்களிடம் பாராட்டைப் பெற்றவர் யார்? என்ற கேள்விக்குப் பதில் அளிக்கையில் கோவி. மணிசேகரனை ''ஓஹோ''வெனப் புகழ்ந்துவிட்டு, அதே பகுதியில் ''ஓர் அரசியல் ஜோக் ப்ளீஸ்'' என்ற கேள்விக்கான பதிலில் ''கோவி. மணிசேகரனின் ம. வி. பேட்டியின் சில பகுதிகள், எழுத்தின் மதிப்பு உயர உயர எழுத்தாளன் இப்படித் தாழ்ந்துதான் போக வேண்டுமா என எண்ண வைத்தன'' எனச் சுட்டிக்காட்டியதன் மூலம், தராசு ஒருவரது நிறை குறைகளை விருப்பு, வெறுப்பின்றி எடுத்துரைப்பதில் தனக்கு நிகர் வேறெவரும் இருக்க முடியாது என ஐயமின்றி நிரூபித்து விட்டார்.

சென்னை — 35, பி. கே. சங்கர்.

• 'ஒரு தாயின் சபதம்' திரைப்பட விமர்சனத்தில் குறை நிறைகளைச் சுட்டிக் காட்டியதுடன், கடைசி நான்கு வரிகளில் எதுகை மோனைகளுடன் விமர்சித்த உமது கிண்டலை ரசித்துப் படித்தேன்.

அயன்புரம், எஸ். ராஜா.

• கல்கி 3.5.1987 தேதியிட்ட இதழில் ''தலையில் ஆடும் மல்லி; தரையில் துவளும் விவசாயி'' கட்டுரை மிகவும் சிறப்பாக இருந்தது.

எங்களது வங்கிக் கிளையின் விவசாயப் பிரிவு மூலம் தாம்பரம் பகுதியில் மல்லிகை, ரோஜா போன்ற பூ விவசாயத்திற்காக 50 பேருக்கு மொத்தம் ரூ. ரூ. 3.25 லட்சம் வரை கடனுதவி செய்திருக்கிறோம். படப்பை, சாலமங்கலம், வடக்குப்பட்டு கிராமத்தின் விவசாயிகளுக்கு நாங்கள் எல்லா உதவிகளையும் செய்து வருகிறோம். எங்களது உதவியால் அவர்கள் வாழ்க்கையில் வளம் அடைந்ததை அவர்களே கடந்த 29.4.1987 அன்று சாலமங்கலம் கிராமத்தில் நடந்த கிராமியத் தொடர்பு விழாவில் வெற்றிக்கதையாக விவரித்திருக்கிறார்கள். கடனை ஒழுங்காகத் திருப்பிக் கட்டியவர்களுக்கான பரிசைத் தட்டிச் சென்றவர்—திரு புச்சையா என்ற மல்லிகைப்பூ விவசாயி என்பதைப் பெருமையுடன் தெரிவிக்கிறோம்.

பாரத ஸ்டேட் வங்கி, டி. ராமமூர்த்தி
தாம்பரம். கிளை மேலாளர்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை—600 032. போன்: 4 31543 4 34 157.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை—600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 78/—; வெளி நாடு கப்பல் தபால் ரூ 250/—; விமானத் தபால் ரூ 650/—. (அறு மாதச் சந்தா ஏற்கப்படும்.)

# ஓ! அப்படி ஒரு தெளிவான செயல்பாடு...

CROWN

கிரௌன்
பத்துலட்சத்திற்கும்
அதிக விற்பனையை
எட்டியுள்
ஒரே டி.வி

COMPONENT TV

CT-701M

## இதை நிரூபிக்க வார்த்தையேதும் தேவையில்லை.

XII LIIXII XIIXIO LIIXOU XIIXIIU XIILXI
OUXII XIIOI XIIO XIIXO LIIXOU XIIXO
UXII XIIO XIIO XILI XIILU XIIU XIIXI LIXU
XII LIXII XIIOU XIIXO LIIXOIIX

XILI LIIXIILI XII XIIIXII XIIL XIO LIIO XIIO
XII LIIXII XIIXIO LIIXOU XIIXIIU XIILXI
OUXII XIIOI XIIO XIIXO LIIXOU XIIXO
UXII XIIO XIIO XILI XIILU XIIU XIIXI LIXU
XII LIXII XIIOU XIIXO LIIXOIIX

OUXII XIIOI XIIO XIIXO LIIXOU XIIXO
UXII XIIO XIIO XILI XIILU XIIU XIIXI LIXU
XII LIXII XIIOU XIIXO LIIXOIIX




CROWN-TV

வேறு எந்த டிவி-ஐயும்விட அதிக
இல்லங்களில் காணப்படும் ஒரே பெய

மேலும் கிடைக்கிறது மாடல் சிடி-701 எம்
(ரிமோட் கண்ட்ரோலுடன்)

